# எம்.ஜி.ஆர்.

கீழாம்பூர்

வெளியீடு
**BALAGOPALLAN NAMBIAR**
NO 48 - LEBUH SIPUT
TAMAN PALM GROVE
41200 KLANG - SELANGOR D.E
MALAYSIA

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | எம்.ஜி.ஆர் |
| ஆசிரியர் | : | கீழாம்பூர் |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | டிசம்பர் 2012 |
| பக்கங்கள் | : | 64 |
| நூல் அளவு | : | 14 X 21.5 செ.மீ |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| அச்சிட்டோர் | : | மாஸ் டைப்போகிராபிக்ஸ்<br>5–ஏ, போயஸ் ரோடு,<br>தேனாம்பேட்டை,<br>சென்னை – 600018<br>தொலைபேசி: 044–42173887 |
| வெளியீடு | : | BALAGOPALLAN NAMBIAR<br>NO 48 - LEBUH SIPUT<br>TAMAN PALM GROVE<br>41200 KLANG - SELANGOR D.E<br>MALAYSIA |

# முன்னுரை



இந்த நூல் எழுதுவதற்கு மூன்று காரணங்கள் உண்டு. 1. எம்.ஜி.ஆர் அவர்கள் மீது இயல்பாகவே எப்போதும் எனக்கொரு மரியாதை. 2. எம்.ஜி.ஆர் அவர்கள் நடத்திய தாய் வார இதழில் நிறைய பேட்டிக் கட்டுரைகள் எழுதியுள்ளேன். அவர் பத்திரிகை மூலமாக நான் சன்மானம் பெற்றவன். 3. எம்.ஜி.ஆர் பற்றி நூல் எழுத வேண்டும் என்று என்னை கேட்டுக் கொண்டனர், கிள்ளான் மாவட்டத் தமிழ் வாசகர் எழுத்தாளர் இயக்கத்தின் தலைவர் பாலகோபாலன் நம்பியார் மற்றும் சென்னையில் என்னுடன் நட்புடன் பழகும் கலைமாமணி பி.ஆர்.துரை ஆகியோர். இவர்களின் வேண்டுகோளும் இந்நூல் வெளிவர ஒரு காரணம் என்று சொல்லலாம்.

இந்த நூலில் அரசியல் எம்.ஜி.ஆரையோ அல்லது திரைப்பட நடிகர் எம்.ஜி.ஆரையோ பற்றி நான் அதிகம் எழுதாமல் மனிதாபிமானி எம்.ஜி.ஆரைத்தான் படம் பிடித்துக் காட்டியிருக்கிறேன்.

எம்.ஜி.ஆருடன் நெருக்கமாக இருந்த திரு வலம்புரிஜான், திரு பி.சி.கணேசன் இருவரும் என் பத்திரிகையுலக குருநாதர்கள். வித்வான் திரு வே. லெட்சுமணன் எனக்கு பின் நாட்களில் நண்பராக வழிகாட்டியாக இருந்தவர். எம்.ஜி.ஆரின் டாக்டர் பி.ஆர்சுப்பிர மணியத்திடம் எனக்கு நல்ல பழக்கம் உண்டு. இத்தனைக்கும் மேலாக எம்.ஜி.ஆர் அவர்களுடைய மெய்க்காப்பாளர் திரு ராமகிருஷ்ணன் அவர்களுடன் அன்பு இருந்தது. அவர் என் மேல் காட்டிய அன்பின் காரணமாகத்தான் பலமுறை என்னால் எம்.ஜி.ஆரைப் பார்க்க முடிந்தது.

எம்.ஜி.ஆரின் பத்திரிகைத் தொடர்பாளராக இருந்த ஆர். சீனிவாசமூர்த்தி அவர்களையும் நான் நன்கு அறிவேன். தினமணி ஆசிரியர் ஏ.என்.சிவராமன் அவர்களின் பேரன் உறவு முறைக்காரன் என்பதால் அதிக நட்பு பாராட்டினார் திரு சீனிவாசமூர்த்தி.

மலேசியாவில் எம்.ஜி.ஆர் மாநாட்டு நிகழ்ச்சிகளில் நான் கலந்து கொண்டுள்ளேன். என் இனிய நண்பர்கள் திரு எஸ்.பி.மணிவாசகம், திரு கரு.பன்னீர்செல்வம் ஆகியோர் ஏற்பாடு செய்த நிகழ்ச்சிகள் இவை. மலேசியாவில் பல அன்பர்கள் எம்.ஜி.ஆர் மீது நிஜமான

பக்தி கொண்டவர்கள். எம்.ஜி.ஆர் போன்று மேக்கப் போட்டுக் கொண்டு மேடையில் தோன்றுபவர்கள் நூறு பேருக்கு மேல் உள்ளனர். இவர்களுடைய அன்பும் அரவணைப்பும் இந்த நூலை எனக்கு எழுத உந்துசக்தியாக அமைந்தவை என்று சொல்லலாம்.

என்னுடைய நண்பர் திரு எஸ்.பி.மணிவாசகம் சகோதர உணர்வுடன் பழகக் கூடியவர். என்னுடைய முதல் நூலை என் குடும்ப நண்பர் பன்முகத் தமிழ்ச் செல்வர் திரு நா.ஆ. செங்குட்டுவன் அவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க வெளியீடு செய்த பெருந்தகை எஸ்.பி. மணிவாசகம். மலேசியாவில் என்னை அறிமுகப்படுத்திய முத்தமிழ் வித்தகர் திரு நா.ஆ. செங்குட்டுவன் அவர்களுக்கும் திரு மணிவாசகம் அவர்களுக்கும் நான் நன்றி சொல்ல வேண்டும்.

திரு பாலன் எம்.ஜி.ஆரின் பரம ரசிகர். நான் எம்.ஜி.ஆர் பற்றி பல சம்பவங்களை இவரிடம் சொல்லும்போது எல்லாம் ஒரு நூல் ஆக்குங்கள் என்று அன்புக் கட்டளை இடுவார். அவருடைய கிள்ளான் இயக்கமே இந்நூலின் வெளியீட்டு விழாவை நடத்த முன் வந்திருப்பது எனக்குப் பெருமையான விஷயம்.

திருப்பதிக்கு ஒப்பான மலேசிய நாட்டுத் திருக்கோவில் கிள்ளான் சுந்தரராஜ பெருமாள் கோவில். இதன் தலைவர் சங்கபூஷண் சித. ஆனந்தகிருஷ்ணன் பலமுறை எனக்கும் பெருமை சேர்த்தவர். இனியவர். அவர் கோவிலின் விழா மண்டபத்தில் இந்நூல் வெளியீடு காண்பது மகிழ்ச்சிக்கு உரியது. அவருக்கும் என் நன்றி. இந்நூலுக்கு வாழ்த்துச் செய்தி வழங்கிய புரவலர் திரு மா.கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கும், திரு. ராம்தாஸ் மனோகரன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு பிழைத்திருத்தம் செய்த நண்பர் திரைப்பட இயக்குநர் திரு கொற்றவன், பத்திரிகையாளர் கௌசிக்ராஜா ஆகியோருக்கும் இதனைச் சிறப்பாக அச்சடித்துக் கொடுத்த மாஸ் டைப்போகிராபிக்ஸ்க்கும் என் நன்றிகள். எம்.ஜி.ஆர் மீது பக்தி கொண்ட அத்தனை நண்பர்களுக்கும் இந்நூலை காணிக்கை ஆக்குகிறேன். என் தாய் தந்தையரை வணங்கி என் குலதெய்வமான ஸ்ரீபரமகல்யாணி ஸ்ரீசைலபதியை மனதில் நினைத்துக் கொண்டு இந்நூலை உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.

அன்பன்

**கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன்**
*(பழைய எண்: 33/1), 54–மந்தவெளி லேன்,*
*மயிலாப்பூர், சென்னை – 600004.*
*போன்: 9444273192*

# வாழ்த்துரை



என்னுடைய இனிய நண்பர் திரு கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன் தமிழகத்திலிருந்து வெளியாகும் கலைமகள் மாத இதழின் ஆசிரியர். புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆர் நடத்திய தாய் வார இதழில் படைப்புக்கள் பல வழங்கியவர். எம்.ஜி.ஆர் அவர்களைப் பலமுறைப் பார்த்துப் பேசியவர்.

எம்.ஜி.ஆர். மாநாடு நாம் நடத்தியபோது இருமுறை மாநாட்டில் அற்புதமான உரையாற்றி இருக்கிறார் திரு கீழாம்பூர் அவர்கள். மலேசிய எம்.ஜி.ஆர் அன்பர்களைச் சந்தித்தும் அவர்களுடன் கலந்துரையாடியும் இருக்கிறார்.

தமிழகத்திற்கு நாம் சென்றபோது புரட்சித் தலைவி டாக்டர் ஜெயலலிதா அவர்களுடைய செயலாளர்களைச் சந்திக்க வைத்தார். தமிழ்நாடு இயல், இசை, நாடகமன்றத்தில் மலேசிய கலைஞர்களுக்கு விருந்து உபசாரத்திற்கும் ஏற்பாடு செய்தார். டாக்டர் ஜாய்ஸ் திலகம் அவர்கள் முக்கிய பங்கு வகித்துவரும் பவித்ரம் தொண்டு நிறுவனத்தின் மூலம் பட்டங்கள் வழங்கவும் ஏற்பாடு செய்தவர் இனிய நண்பர் திரு கீழாம்பூர் அவர்கள்.

மலேசிய நாட்டின் பல எழுத்தாளர்களுடைய சிறுகதைகளைத் தொகுத்து நூலாக்கி மலேசிய நாட்டின் இலக்கிய படைப்பாளர்களுக்கு ஒரு கௌரவத்தைத் தேடித் தந்தவர். அண்ணன் திரு செங்குட்டுவன் மூலம் அறிமுகமானவர் இன்று எங்கள் இதயத்தில் வாழ்பவர். மலேசிய திருநாட்டிற்கு பலமுறை வந்திருந்தாலும் எதற்கும் ஆசைப்படாமல் எளிமையாகக் காட்சி தருபவர் திரு கீழாம்பூர் அவர்கள். அவர்கள் புரட்சித் தலைவரைப் பற்றி எழுதியிருக்கும் இந்நூல் மலேசிய எம்.ஜி.ஆர் ரசிகர்களின் கைகளில் தவழவேண்டும். நல்லதொரு பணி. வாழ்த்துகிறேன்.

அன்பன்

***எஸ்.பி.மணிவாசகம்***

*எம்.ஜி.ஆர் விழா ஏற்பாட்டுக் குழுத்தலைவர்*

*மலேசியா*

# வாழ்த்துரை



**எ**ம்.ஜி.ஆர். மாநாட்டுக்குழுத் தலைவர் எங்கள் நண்பர் திரு எஸ்.பி.மணிவாசகம் அவர்கள் ஒரு இலக்கியவாதியை அறிமுகப் படுத்துவதாகச் சொன்னார். சரவணபவன் ஹோட்டல் மஜித் இந்தியாவில் திரு கீழாம்பூர் அவர்களை அறிமுகப்படுத்தி அவருடன் உணவு அருந்த ஏற்பாடு செய்தார் திரு மணிவாசகம்.

சுத்த சைவரான திரு கீழாம்பூர், புரட்சித் தலைவர் நடத்திய தாய் பத்திரிகையிலும் இன்னும் வேறுசில தினசரிப் பத்திரிகைகளுக்காகவும் எம்.ஜி.ஆரைப் பற்றி செய்திகளையும் பேட்டிகளையும் எழுதியவர் என்பதில் எங்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி.

அன்பானவர், பழகுவதற்கு தன்மையானவர், முடிந்த வரையில் உதவுகிறவர் திரு கீழாம்பூர் என்பதையும் அவருடன் பழகும்போது புரிந்து கொண்டோம். தமிழகத்திற்கு நாங்கள் சென்றபோது எனக்கும் திரு பாலகோபாலன் நம்பியார் அவர்களுக்கும் பவித்ரம் தொண்டு நிறுவனம் மூலம் விருது கொடுத்து விருந்து கொடுத்து கௌரவித்தார்கள்.

எம்.ஜி.ஆர் என்ற மாபெரும் மக்கள் சக்தியைப் பல கோணங்களில் அணுகியவர் திரு கீழாம்பூர் அவர்கள். வாழும்போதே வரலாறு ஆன தங்கத் தலைவனைப் பற்றி தரமான நூல் தந்துள்ளார். வாழ்த்துகிறோம். வரவேற்கிறோம்.

அன்புடன்

கரு. பன்னீர்செல்வம்

*எம்.ஜி.ஆர் விழா ஏற்பாட்டுக் குழு செயலாளர்*

*மலேசியா*

# நட்பு - உரை



என்னையும் திரு கீழாம்பூரையும் இணைத்தது எம்.ஜி.ஆர்.தான். எப்படி என்று கேட்கலாம்? நான் மலேசிய நாட்டுத் தொலைக்காட்சியான ஆஸ்ட்ரோவுக்கு எம்.ஜி.ஆர் பற்றி புதுக்கவிதை எழுதிப் போட்டிக்கு அனுப்பினேன்.

ஆஸ்ட்ரோ டிவி அதிகாரி டாக்டர் ராஜாமணி, திரு கீழாம்பூர் அவர்களை எம்.ஜி.ஆர் புதுக்கவிதைப் போட்டி, மரபுக் கவிதைப்போட்டி, ஆங்கில கவிதைப் போட்டி ஆகிய போட்டிகளுக்கு நடுவராக்கி சிறந்ததைத் தேர்வு செய்யச் சொல்லியிருந்தார்.

கலைமகள் மாத இதழின் ஆசிரியர் திரு கீழாம்பூர், சென்னையில் பல சமூக இயக்கங்களுடன் தொடர்பு உடையவர். சென்னைத் தொலைக்காட்சிக்காக நிறைய நிகழ்ச்சிகளைக் கொடுத்திருப்பவர். எனவே டாக்டர் ராஜாமணி அவர்கள் மலேசியாவுக்கு வருகைபுரிந்த திரு கீழாம்பூரை நடுவராக்கினார்.

தாய் பத்திரிகையில் பல படைப்புக்களைத் தந்தவர் திரு கீழாம்பூர். எம்.ஜி.ஆரை நேரில் பார்த்தவர், அவருடன் பேசியவர், பேட்டி எடுத்தவர் என்ற முறையில் திரு கீழாம்பூரை டாக்டர் ராஜாமணி அவர்கள் நடுவராக்கி இருக்கவேண்டும்.

எம்.ஜி.ஆர். பற்றி போட்டிக்குப் பெறப்பட்ட புதுக்கவிதைகளைப் படித்த திரு கீழாம்பூர் என்னுடைய கவிதையை முதல் பரிசுக்கு உரிய கவிதையாகத் தேர்வு செய்தார்கள். முன்பின் அறியாத திரு கீழாம்பூர் அவர்களுடைய நட்பு, என்னை அவர் முதல் பரிசுக்கு உரியவராகத் தேர்வு செய்த பின்பு தான் கிட்டியது.

என்னுடைய நீண்டகால நண்பரான முத்தமிழ்ச் செல்வர் திரு நா.ஆ.செங்குட்டுவன் அவர்களுக்கும் திரு கீழாம்பூர்

நண்பராக இருந்ததால் எங்களுடைய நட்பு இன்னமும் ஆழமானது, விரிந்தது.

கீழாம்பூர் அவர்களுடைய நேர்மை, எளிமை இவை பாராட்டப்பட வேண்டிய ஒன்று. அழகாகப் பேசி கேட்பவர்களுக்கு புதிய செய்திகளைக் கொடுக்கக் கூடியவர். யார் மனதையும் புண்படுத்தாமல் எல்லோரையும் அரவணைத்துச் செல்லக் கூடியவர்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா, தமிழ் அறிஞர் கி.வா.ஜ ஆகியோர் ஆசிரியராக இருந்த கலைமகளின் இப்போதைய ஆசிரியர். நல்ல இலக்கியவாதி. மலேசியாவுக்கு நன்கு அறிமுகமானவர். கிள்ளான் மாவட்டத் தமிழ் வாசகர் எழுத்தாளர் இயக்கத்தில் பலமுறை பேசிய பேச்சாளர். திரு எஸ்.பி.மணிவாசகம் ஏற்பாடு செய்திருந்த எம்.ஜி.ஆர் மாநாடுகளில் அற்புதமாக சொற்பொழிவாற்றியவர். அவர் எழுதிய எம்.ஜி.ஆர் பற்றிய நூலுக்கு விழா எடுப்பதில் பெருமை கொள்கிறோம்.

எம்.ஜி.ஆர் அவர்களைப் பற்றி வித்தியாசமான கோணத்தில் ஆராயப்பட்டுள்ள இந்நூலை மலேசிய எம்.ஜி.ஆர் ரசிகர்கள், அன்பர்கள் அவசியம் வாசித்து மகிழ்வார்கள் என்பது திண்ணம். ஒரு புனிதரை அடையாளம் காட்டியிருக்கும் திரு கீழாம்பூர் நீண்ட நாட்கள் ஆரோக்கியத்துடன் வாழவேண்டும். வாழ்த்துக்கள். இந்நூலை மலேசியாவில் வெளியீடு செய்வதில் பெருமைப்படுகிறேன்.

தங்கள்

***பாலகோபாலன் நம்பியார்***

*தலைவர், கிள்ளான் மாவட்ட*
*தமிழ் வாசகர் எழுத்தாளர் இயக்கம்,*
*மலேசியா*

# வாழ்த்துரை



கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன் அவர்களைப் பல வருடங்களாக நான் அறிவேன். நமது திருக்கோயிலுக்கு பலமுறை வந்துள்ளார்கள். கி.வா.ஜ அறக்கட்டளையின் சார்பில் இங்கே சில ஆண்டுகளுக்கு முன்பு விழாவும் நடத்தி உள்ளார்கள்.

என்னுடைய இனிய நண்பர் திரு பாலகோபாலன் நம்பியார் அவர்கள் எனக்கு திரு கீழாம்பூர் அவர்களை அறிமுகப்படுத்தினார். நல்ல பண்பாளர் மட்டுமல்ல பலருக்கு உதவக்கூடியவர். எம்.ஜி.ஆர் அவர்களைப் பற்றி அவர் எழுதியுள்ள நூல் பல தகவல்களை நமக்குத் தருகிறது.

சிறந்த இலக்கியவாதியான திரு கீழாம்பூர் அவர்களை மனதார வாழ்த்துகிறேன். பல நல்ல பணிகள் அவர் செய்ய ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் அருள்புரியட்டும்.

இப்படிக்கு

***சித. ஆனந்தகிருஷ்ணன்***

*தலைவர்*

*கிள்ளான் ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் கோயில்*

*மலேசியா*

# நூல் நோட்டம்



நண்பர் திரு கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன் எழுதியுள்ள எம்.ஜி.ஆர் பற்றிய நூல் படிப்பதற்கு விறுவிறுப்பாக உள்ளது.

தொல்காப்பியம், கம்பஇராமாயணம் போன்றவைகளை தமிழ் அறிஞர்கள் மட்டும்தான் அறிந்திருப்பார்கள் என்ற நினைப்பு பலருக்கு உண்டு. புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர் திரைப்பட நுணுக்கங்களை அறிந்தவர். அவருக்குத் தொல்காப்பியம் தெரிந்திருந்தது என்பது உண்மையிலேயே புதிய செய்தி.

எம்.ஜி.ஆர் அவர்களை நேரில் பார்த்தவர் திரு கீழாம்பூர். பத்திரிகையாளராக நிருபர்களுடன் போய்ப் பார்த்திருக்கிறார். எம்.ஜி.ஆர் என்கிற மாபெரும் மனிதரைப் பற்றி இதய சுத்தியுடன் எழுதப்பட்ட நூல் இது.

அன்புடன்

*ராம்தாஸ்மனோகரன்*

*சங்கச்செய்தி பொறுப்பாசிரியர்*
*மக்கள் ஓசை நாளிதழ்*
*கோலாலம்பூர்*

# வாழ்த்துரை



எம்.ஜி.ஆர் எனது வழிகாட்டி. அவருடைய பாடல்கள் எனக்குப் புத்துணர்ச்சியைக் கொடுத்தவை. அவருடைய படங்கள் எனக்குப் பாடமாக அமைந்தவை.

எம்.ஜி.ஆர் அவர்களின் படங்களைப் பார்த்துத்தான் நான் வாழ்வில் உயர்வு பெற்றேன். சிறந்த கொடையாளியான எம்.ஜி.ஆர் அவர்களைப் பற்றி நண்பர் திரு கீழாம்பூர் எழுதியிருக்கும் நூல் என் மனதைக் கவர்ந்தது.

இந்த நூலை என்னுடைய நண்பர்கள் சுந்தரராஜ பெருமாள் தேவஸ்தான மண்டபத்தில் வெளியீடு செய்வதில் எனக்கு அளவில்லா மகிழ்ச்சி.

அன்புடன்

*மா.கோபாலகிருஷ்ணன்*

*புரவலர், கிள்ளான் மாவட்ட*
*தமிழ் வாசகர் எழுத்தாளர் இயக்கம்,*
*மலேசியா*

# மறுஜென்மம்

1984ஆம் வருடம் அக்டோபர் மாதம் 6ஆம் தேதி எம்.ஜி.ஆர் அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்டு, அப்பல்லோ ஆஸ்பத்திரியில் அவசரப்பிரிவில் சேர்க்கப்பட்டார்.

அவருக்குச் சிறுநீரக கோளாறு ஏற்பட்டுள்ளது. அதற்காக ''டயாலிசிஸ்'' செய்யப்படுவதாகவும் தமிழக அரசு சார்பில் அறிவிக்கப்பட்டது.

தினமணி நாளிதழில் சாமி என்றொரு துணைத் தலைமை நிருபர் இருந்தார். எனக்கு மிகவும் நெருக்கமானவர். எம்.ஜி.ஆர் அவர்கள் மீது உள்ள பிரியத்தின் காரணமாக சாமி அவர்களுடன் அப்பல்லோ மருத்துவமனைக்குச் சென்றேன். அப்பல்லோ தலைமை இயக்குனர் நிருபர்களுக்குப் பேட்டியளித்தார்.

14ஆம் தேதியன்று அப்பல்லோ ஆஸ்பத்திரியின் தலைமை இயக்குனர் பி.சி. ரெட்டி நிருபர்களிடம் கூறுகையில், ''எம்.ஜி.ஆருக்கு மூளை நரம்பில் ரத்த ஓட்டம் பாதிக்கப்பட்டுள்ளது. அதனால் அவர் உடலின் வலது பாகம் முழுவதும் பக்கவாதத்தில் பாதிக்கப்பட்டுள்ளது. 72 மணி நேரத்துக்குப் பிறகுதான் அவர் உடல் நிலைபற்றி முழுமையான விவரங்களைக் கூறமுடியும்'' என்று கருத்து தெரிவித்தார்.

அக்டோபர் 16ஆம் நாள் இந்திராகாந்தி சென்னை வந்து, அப்பல்லோ ஆஸ்பத்திரியில் எம்.ஜி.ஆர் அவர்களைப் பார்த்தார்.

அக்டோபர் 20ஆம் தேதியன்று, ஜப்பானில் இருந்த டாக்டர் கானு, டாக்டர் நகமோரா என்ற 2 பிரபல டாக்டர்கள் வந்து எம்.ஜி.ஆரின் உடல் நிலையைப் பரிசோதித்தனர். எம்.ஜி.ஆருக்கு என்னென்ன சிகிச்சைகள் செய்ய வேண்டும் என்பது பற்றி ஆலோசனை வழங்கினார்கள்.

எம்.ஜி.ஆர் அவர்களுடைய குடும்ப டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம். இவரையும் எனக்கு நன்கு தெரியும். என்னுடைய சொந்த ஊரான கீழாம்பூருக்குப் பக்கத்திலுள்ள கிராமம் பிரம்மதேசம். டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம் அவர்களுக்கு பிரம்மதேசம் சொந்த ஊர். எனவே என்னிடம் இந்த டாக்டர் நட்பு பாராட்டினார். வானொலி இளையபாரத நிகழ்ச்சிக்காக எம்.ஜி.ஆர் கலந்து கொண்ட நிகழ்ச்சியை (இதனைத் தனியாக ஒரு கட்டுரையில் எழுதியுள்ளேன்) ஒருமுறை ஒலிப்பதிவு செய்து இளைஞர் செய்திச் சுடராகத் தயாரித்து வானொலியில் ஒளிபரப்பினேன். இந்த நிகழ்வுக்கு எனக்கு உறுதுணை புரிந்ததோடு, எம்.ஜி.ஆர் அவர்களை முக்கிய பிரமுகர் அறையில் சந்திக்க வைத்தவரும் டாக்டர் பி.ஆர்.எஸ்.தான்.

இந்திராகாந்தி அவர்கள் சென்னை வந்தபோது அப்பல்லோவுக்குச் சென்று எம்.ஜி.ஆர் அவர்களைப் பார்த்தார்கள். இந்த நிகழ்வின்போதும் என்னைச் செய்தி சேகரிக்க துணைக்கு அழைத்துக் கொண்டு போனார் தினமணி நிருபர் சாமி. டாக்டர் பி.ஆர்.எஸ் உதவியுடன்தான் தினமணிக்கு பிரத்யேகமாக செய்திகள் கிடைத்தன.

அக்டோபர் 31ஆம் தேதி டெல்லியில் பிரதமர் இந்திராகாந்தி அவருடைய மெய்க் காவலர்களாலேயே சுட்டுக் கொல்லப்பட்டார். சோகம் தேசத்தைக் கவ்வியது.

உடல்நிலை சரி இல்லாமல் படுத்த படுக்கையிலிருந்த எம்.ஜி.ஆர். இந்தச் செய்தியை அறிந்தால், அவருடைய உடல்நிலை மேலும் மோசம் அடையும் என்பதால் இத்துயரச் செய்தியை அவருடைய குடும்ப உறுப்பினர்கள் அவருக்கு தெரிவிக்கவில்லை.

எம்.ஜி.ஆருக்கு அமெரிக்காவில் சிகிச்சை அளிப்பது அவசியம் என்று மருத்துவ நிபுணர்கள் கருதியதால், அவர் நவம்பர் 5ஆம் தேதி (1984) விமானம் மூலம் அமெரிக்காவுக்கு கொண்டு செல்லப்பட்டார்.

எம்.ஜி.ஆரின் மனைவி ஜானகி அம்மாள், அமைச்சர் ஹண்டே, 10 டாக்டர்கள் உள்பட 24 பேர் கொண்ட குழுவினர்

உடன் சென்றனர். நியூயார்க் நகரில் உள்ள புரூக்ளின் மருத்துவமனையில் எம்.ஜி.ஆர் அவர்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது.

என்னுடைய நண்பர் கவிஞர் முருகதாஸன் எம்.ஜி.ஆர் அவர்களுடைய பரம ரசிகர். அமெரிக்கா சென்றபோது எம்.ஜி.ஆர் அவர்களுக்கு மருத்துவம் செய்த டாக்டர்களைத் தனியாகப் போய் 2011ஆம் ஆண்டு சந்தித்து எம்.ஜி.ஆர் அவர்களுக்கு நடைபெற்ற மருத்துவ சிகிச்சை முறைகளை வீடியோவில் கண்டதாகச் சொன்னார். ''அந்த வீடியோவைப் பார்த்தால் புரட்சித் தலைவர் பிழைத்தது மறு ஜென்மம்தான்'' என்று தனக்குப்பட்டதாகவும் சொன்னார்.

பல பேருடைய பிரார்த்தனையால்தான் எம்.ஜி.ஆர் மறுஜென்மம் எடுத்தார் என்று சொல்லலாம். சென்னை திருவல்லிக்கேணியிலுள்ள திருவட்டீஸ்வரர் கோவிலில் தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதய்யரின் பேரன் திரு சுப்பிரமணியம் அவர்களுடன் நானும் எம்.ஜி.ஆருக்காக பிரார்த்தனை செய்தேன்.

எம்.ஜி.ஆர் பூரண குணம் அடைய பல கோவில்களில் பிரார்த்தனைகள் நடந்தன. சகல மதத்தினரும் இந்தப் பிரார்த்தனைகளில் கலந்து கொண்டனர்.

தமிழ்நாட்டிலோ அல்லது இந்தியாவின் மற்ற எந்தப் பகுதியிலோ, ஒரு தலைவருக்காக இந்த அளவுக்கு பிரார்த்தனைகளும், வேண்டுதல்களும் நடந்ததில்லை.

கோவில் பிரசாதங்கள், அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த எம்.ஜி.ஆருக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

இந்திராகாந்தி மரணத்தைத் தொடர்ந்து பிரதமராகப் பொறுப்பேற்ற ராஜீவ்காந்தி, பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டுத் தேர்தலைச் சந்திக்கத் தீர்மானித்தார். அதனால் பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. பாராளுமன்றத்துக்கு டிசம்பர் 24ஆம் தேதி தேர்தல் நடைபெறும் என்றும், மனு தாக்கல் நவம்பர் 20ஆம் தேதி தொடங்கும் என்றும் அறிவிக்கப்பட்டது.

தமிழக சட்டசபையையும் கலைத்துவிட்டு, பாராளுமன்றத் தேர்தலுடன் தமிழக சட்டசபைத் தேர்தலையும் சேர்த்து நடத்துவது என்று அ.தி.மு.க தலைவர்கள் முடிவு செய்தனர்.

இது பற்றி ராஜீவ்காந்தியைச் சந்தித்துப் பேசினார்கள். அ.தி.மு.க.வும், இ.காங்கிரசும் கூட்டணி அமைத்து போட்டியிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

அதன்படி, தமிழ்நாடு சட்டசபையும் நவம்பர் 14ஆம் தேதி கலைக்கப்பட்டது.

அ.தி.மு.க.வுக்கும், இ.காங்சிரசுக்கும் ஏற்பட்ட உடன்பாட்டின்படி பாராளுமன்றத்துக்கு அ.தி.மு.க.வுக்கு 13 தொகுதிகளும், இ.காங்கிரசுக்கு 26 தொகுதிகளும் ஒதுக்கப்பட்டன. சட்டசபைக்கு அ.தி.மு.க 152 தொகுதிகளிலும், இ.காங்சிரஸ் 72 தொகுதிகளிலும் போட்டியிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த எம்.ஜி.ஆர் மதுரை மாவட்டம் ஆண்டிப்பட்டி தொகுதியில் போட்டியிட்டார்.

தேர்தல் பிரச்சாரத்தின்போது, எம்.ஜி.ஆர் உடல்நிலை பற்றி கேள்விகள் எழுப்பட்டன. ஆனால், அவர் குணம் அடைந்து வருகிறார் என்றும், பூரண குணம் அடைந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்பார் என்றும் அ.தி.மு.க தலைவர்கள் கூட்டங்களில் பேசினர்.

எம்.ஜி.ஆர் எழுந்து நடப்பது, பத்திரிகை படிப்பது, சாப்பிடுவது போன்ற காட்சிகளைக் கொண்ட வீடியோப் படத்தை அமெரிக்காவிலிருந்து கொண்டு வந்து, தொலைக்காட்சியில் காட்ட ஏற்பாடு செய்யப்பட்டன.

இந்த பிரச்சாரம், அ.தி.மு.க.வுக்கு சாதகமான சூழ்நிலையை உருவாக்கியது.

டிசம்பர் 19ஆம் தேதி அமெரிக்காவில் எம்.ஜி.ஆருக்கு மாற்று சிறுநீரக அறுவைச் சிகிச்சை நடந்தது. எம்.ஜி.ஆரின் அண்ணன் எம்.ஜி. சக்ரபாணி மகள் லீலாவதி, தனது சிறுநீரகங்களில் ஒன்றை எம்.ஜி.ஆருக்கு வழங்கினார்.

அந்தச் சிறுநீரகத்தை எம்.ஜி.ஆர் உடல் ஏற்றுக் கொண்டதால், எம்.ஜி.ஆர் உடல்நிலை தேறினார்.

டிசம்பர் 24ஆம் தேதி தமிழ்நாட்டில் பாராளுமன்றத்துக்கும், சட்டசபைக்கும் தேர்தல் நடந்தது.

தமிழ்நாட்டில் அ.தி.மு.க, இ.காங்கிரஸ் கூட்டணிக்குப் பெரும் வெற்றி கிடைத்தது. அ.தி.மு.க 130 இடங்களிலும், இ.காங்கிரஸ் 62 இடங்களிலும் வெற்றி பெற்றன.

டெல்லியில், இ.காங்கிரஸ் மூன்றில் இரண்டு பங்கு மெஜாரிட்டியுடன் ஆட்சியைப் பிடித்தது. பிரதமராக ஜனவரி 31ஆம் தேதி (1985) ராஜீவ்காந்தி பதவி ஏற்றார்.

மரணத்தின் விளிம்பு வரை சென்ற எம்.ஜி.ஆர், எமனையும் வெற்றி கொண்டு 4.2.1985 அன்று சென்னை திரும்பினார்.

விமானநிலையம் அருகே உள்ள மைதானத்தில் அவருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் அ.தி.மு.க தொண்டர்கள் லட்சக்கணக்கில் கூடினார்கள்.

எம்.ஜி.ஆர் வழக்கமான புன்னகையுடன் மேடையிலேறி கையசைத்தார். அவரை விமானநிலையத்தில் பத்திரிகையாளர் பகுதியிலிருந்து நானும் பார்த்தபோது மிகுந்த சந்தோஷப்பட்டேன். எம்.ஜி.ஆரை மிக அருகில் இருந்து பார்த்தேன். எம்.ஜி.ஆரின் வாழ்க்கை சரித்திரத்தை அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.



# சரித்திர நாயகன்

திரைத் துறையிலும், பின்னர் அரசியல் துறையிலும் சாதனைப் படைத்து, தமிழக முதல்வராக 10 ஆண்டுக் காலம் பணியாற்றிய எம்.ஜி.ஆர்., இலங்கையில் உள்ள கண்டியில் 1917 ஜனவரி 17ஆம் தேதி பிறந்தார்.

தந்தை கோபால மேனன்; தாயார் சத்தியபாமா.

கோபாலமேனன், கேரளத்திலும், தமிழ்நாட்டிலும், திருச்சூர், அரூர், கரூர், எர்ணாகுளம் முதலிய இடங்களில் மாஜிஸ்திரேட்டராகப் (நீதிபதி) பணியாற்றினார். பின்னர் இலங்கைக்குச் சென்று ஒரு கல்லூரியில் முதல்வராக அமர்ந்தார். அப்போதுதான் இலங்கையில் எம்.ஜி.ஆர் பிறந்தார்.

இவருக்கு பெற்றோர் சூட்டிய பெயர் இராமச்சந்திரன். திரைப்படங்களில் நடிக்க ஆரம்பித்தபோது எம்.ஜி.ராம்சந்தர் என்றும், பின்னர் எம்.ஜி.ராமச்சந்திரன் என்றும் அழைக்கப்பட்டார். திரை வாழ்க்கையில் சிகரத்தை அடைந்தபின், ''புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர்.'' என்றும், ''மக்கள் திலகம் எம்.ஜி.ஆர்.'' என்றும் மக்களால் அழைக்கப்பட்டார்.

எம்.ஜி.ஆருக்கு இரண்டரை வயதாகும்போது தந்தை கோபால மேனன் இறந்து விட்டார்.

எம்.ஜி.ஆருக்கு கமலாட்சி, சுமித்ரா என்ற 2 மூத்த சகோதரிகளும், பாலகிருஷ்ணன், சக்ரபாணி என்ற இரண்டு மூத்த சகோதரர்களும் உண்டு. குடும்பத்தில் ஐந்தாவதாகப் பிறந்தவர் எம்.ஜி.ஆர்.

கோபாலமேனன் காலமானதும், சத்தியபாமா, குழந்தைகளுடன் தமிழ்நாட்டுக்கு வந்து கும்பகோணத்தில் குடியேறினார். கும்பகோணத்தில் உள்ள அணையாடி பள்ளிக்கூடத்தில் தான் எம்.ஜி.ஆர் படித்தார். வறுமையுடன் போராடிக் கொண்டு, குழந்தைகளை அன்புடன் வளர்த்தார்

சத்தியபாமா. இந்நிலையில் எம்.ஜி.ஆரின் மூத்த சகோதரி கமலாட்சி 16 வயதில் மரணம் அடைந்தார்.

வறுமை காரணமாக எம்.ஜி.ஆர் படிப்பைத் தொடர முடியாமல் நாடகங்களில் நடிக்க ஆரம்பித்தார். நல்ல சிவப்பாகவும், அழகாகவும் சுருட்டை முடியுடனும் இருந்த எம்.ஜி.ஆருக்கு நல்ல வேடங்கள் கிடைத்தன. லவ–குசா நாடகத்தில் லவனாகத் தோன்றி சபையோரின் பாராட்டைப் பெற்றார்.

''சதி லீலாவதி'' (1936) எம்.ஜி.ஆர், நடித்த முதல் படம். அதன்பின், சில படங்களில் சிறு வேடங்களில் நடித்தும் இருக்கிறார்.

1941இல் எம்.கே.தியாகராஜ பாகவதரின் தோழனாக ''அசோக்குமார்'' படத்தில் நடித்தார். ''யார் அந்தத் துடிப்பான இளைஞன் என்று எல்லோரும் கேட்கும்படியாக எம்.ஜி.ஆரின் நடிப்பு அமைந்திருந்தது.

1947இல் ஜுபிடர் தயாரிப்பான ''ராஜகுமாரி'' என்ற படத்தில் முதன் முதலாகக் கதாநாயகனாகத் தோன்றினார். இதில் அவருக்கு ஜோடியாக நடித்தவர் மாலதி (''பாதாள பைரவி'' படத்தின் கதாநாயகி).

இந்தப் படத்தில் எம்.ஜி.ஆரும், பாலையாவும் போடும் கத்திச் சண்டை குறிப்பிடத்தக்கதாக அமைந்தது. ரசிகர்களின் மனதைக் கவர்ந்தது.

பின்னர், ''மோகினி'' என்ற படத்தில் எம்.ஜி.ஆரும், வி.என்.ஜானகியும் ஜோடியாக நடித்தார்கள். ''மருத நாட்டு இளவரசி'' படத்திலும் இணைந்து நடித்தனர்.

எம்.ஜி.ஆர் ''வீர ஜெகதீஷ்'' என்ற படத்தில் நடித்து வந்தபோது, அவருக்கு 21 வயது. அப்போது அவருக்குத் திருமணம் நடந்தது. மனைவி பெயர் பார்கவி. அழகிலும், குணத்திலும் தங்கம் போன்றவர். எனவே அவரை ''தங்கமணி'' என்றே எம்.ஜி.ஆரின் தாயார் அழைப்பாராம்!

எம்.ஜி.ஆர் – பார்கவி இல்லற வாழ்க்கை அதிக நாள் நீடிக்கவில்லை. சொந்த ஊரான பாலக்காட்டுக்குச்

சென்றிருந்தபோது, பார்கவி நோயுற்று காலமானார். எம்.ஜி.ஆர் பாலக்காட்டிற்குப் போய்ச் சேருவதற்குள் பார்கவி உடல் அடக்கம் செய்யப்பட்டுவிட்டது. இதனால் மனம் உடைந்து போனாராம் எம்.ஜி.ஆர்.

வாழ்க்கையில் வெறுப்புற்று, ஒரு சந்யாசி போலவே வாழலானார்.

மகனின் நிலையைக் கண்டு வருந்திய சத்யா அம்மையார், அவருக்கு மறுமணம் செய்து வைக்க விரும்பினார். ஆனால், எம்.ஜி.ஆர் மறுத்துவிட்டார். பின்னர், தாயாரின் சொல்லைத் தட்ட முடியாமல், சதானந்தவதி என்ற பெண்மணியைக் கை பிடித்தார்.

சதானந்தவதியுடன் எம்.ஜி.ஆர் இல்லறம் இனிதாய் அமைந்தது. ஆனால், விதி மீண்டும் விளையாடியது. சதானந்தவதி கருத்தரித்த போது, காசநோய் அவரைப் பற்றிக் கொண்டது. அதற்கு சிகிச்சை அளித்தபோது, கருச்சிதைவு ஏற்பட்டது.

1950இல் மீண்டும் அவருக்கு கருச்சிதைவு ஏற்பட்டதைத் தொடர்ந்து, நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையானார்.

இந்தச் சமயத்தில்தான், ''மருத நாட்டு இளரவசி'' படத்தில், எம்.ஜி.ஆரும், ஜானகியும் ஜோடியாக நடித்தனர். தோற்றத்தில் தன் முதல் மனைவி பார்கவி போலவே ஜானகி இருப்பதைக் கண்டு எம்.ஜி.ஆர் வியந்து போனார்.

இருவருக்கும் காதல் அரும்பியது. வி.என்.ஜானகி, பிரபல பாடலாசிரியர் பாபநாசம் சிவனின் சகோதரர் வைக்கம் ராஜகோபால் அய்யரின் மகள் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு நாள் எம்.ஜி.ஆரின் வீட்டுக்கு ஜானகி சென்றார். அவரைப் பார்த்ததுமே சதானந்தவதிக்கு ரொம்பப் பிடித்துவிட்டது. தங்கை என்றே அழைத்தார். ஜானகியை மணந்து கொள்ளும்படி எம்.ஜி.ஆரை வற்புறுத்தினார்.

கலையுலகப் பிரமுகர்களும் இவ்வாறே வலியுறுத்த, எம்.ஜி.ஆரும், ஜானகியும் தம்பதிகளாயினர்.

அந்தச் சமயத்தில் எம்.ஜி.ஆரை விட வி.என்.ஜானகி மிகவும் புகழ்பெற்ற நட்சத்திரமாக விளங்கினார். அவர் நடித்த பேரறிஞர் அண்ணாவின் ''வேலைக்காரி'', ''ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி'', ''தேவகி'' முதலிய படங்கள் பெரும் வெற்றியை பெற்றிருந்தன. அப்படியிருந்தும், எம்.ஜி.ஆரை மணந்ததும், திரை உலகிலிருந்து ஜானகி விலகினார்.

ஆரம்பத்தில் எம்.ஜி.ஆர். காங்கிரஸ் ஈடுபாடு கொண்டவராக இருந்தார். கதர் வேட்டி – சட்டைதான் அணிவார். காந்திய கொள்கைகளில் பிடிப்பு கொண்டவர்.

1952–இல், எம்.ஜி.ஆரை அறிஞர் அண்ணாவிடம் திரு டி.வி.நாராயணசாமி அறிமுகம் செய்து வைத்தார். அதைத் தொடர்ந்து தி.மு.கழகத்தில் தன்னை இணைத்துக் கொண்டார்.

இந்த நேரத்தில், ''மந்திரி குமாரி'', ''மர்மயோகி'', ''சர்வாதிகாரி'', ''அந்தமான் கைதி'', ''என் தங்கை'', ''குமாரி'', ''ஜெனோவா'' முதலிய படங்களில் கதாநாயகனாக நடித்து வெற்றிப் படிகளில் வேகமாக ஏறிக் கொண்டிருந்தார். ரசிகர்கள் எம்.ஜி.ஆரை பெரிய ஹீரோவாக ஏற்றனர்.

கலைஞர் கருணாநிதிக்கும், எம்.ஜி.ஆருக்கும் நெருங்கிய நட்புறவு ஏற்படவே, அவர்கள் பங்குதாரர்களாகச் சேர்ந்து ''மேகலா பிக்சர்ஸ்'' படக் கம்பெனியைத் தொடங்கினார்கள். இதன் சார்பில் தயாரிக்கப்பட்ட ''நாம்'' படத்தில் எம்.ஜி.ஆர் நடித்தார். படம் வெற்றி பெற்றது.

தன் மகன் திரையுலகில் வெற்றி உலா வருவதைக் கண்ட மகிழ்ச்சியுடன் அன்னை சத்யா காலமானார். அன்னையின் விருப்பப்படி, லாயிட்ஸ் ரோடு பங்களாவை எம்.ஜி.ஆர். வாங்கி ''சத்யா இல்லம்'' என்று பெயரிட்டார்.

1954–இல் வெளிவந்த ''மலைக்கள்ளன்'' படம் சூப்பர் ஹிட் ஆகியது. இப்படத்தில் எம்.ஜி.ஆரும், பானுமதியும் ஜோடியாக நடித்திருந்தனர்.

இப்படம் எம்.ஜி.ஆர் வாழ்க்கையில் திருப்பத்தை உண்டாக்கியது. மதுரை வீரன், குலேபகாவலி முதலிய படங்களில் நடித்து ''வசூல் சக்ரவர்த்தி'' என்று பெயர் பெற்றார்.

இந்தக் காலகட்டத்தில் எம்.ஜி.ஆரும், சிவாஜி கணேசனும் சேர்ந்து நடித்த ''கூண்டுக்கிளி'' படம் வெளிவந்தது. பரபரப்பாக எதிர்பார்க்கப்பட்ட இப்படம், இரு தரப்பு ரசிகர்களையும் திருப்தி செய்ய முடியாமல் தோல்வியைத் தழுவியது.

மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரித்த தமிழ்நாட்டின் முதல் கலர் படமான ''அலிபாபாவும் 40 திருடர்களும்'' படத்தில் எம்.ஜி.ஆரும், பானுமதியும் நடித்தனர். படம் சக்கை போடு போட்டது. மக்கள் மனதில் நின்றது.

தாய்க்குப் பின் தாரம், சக்ரவர்த்தி திருமகள், ராஜராஜன், மகாதேவி, புதுமைப்பித்தன் ஆகிய படங்களும் வெற்றி பெற்றன.

1958ஆம் ஆண்டில், எம்.ஜி.ஆர் பிக்சர்ஸ் என்ற பெயரில் தன் சொந்தப் படக் கம்பெனியைத் தொடங்கி, ''நாடோடி மன்னன்'' படத்தை பிரம்மாண்டமாகத் தயாரித்தார். இரட்டை வேடத்தில் நடித்ததுடன், படத்தை அவரே டைரக்ட் செய்தார். பானுமதியும், சரோஜாதேவியும் அவருடன் நடித்தனர். இப்படத்தில்தான் சரோஜாதேவி அறிமுகமானார். இப்படம் மாபெரும் வெற்றி பெற்று, எம்.ஜி.ஆரை சிகரத்துக்கு உயர்த்தியது.

எம்.ஜி.ஆர் பெரும்பாலும் சரித்திரப் படங்களிலும், ராஜா – ராணி படங்களிலும்தான் நடித்து வந்தார். ஏ.எல்.சீனிவாசன் தயாரித்த ''திருடாதே'' படத்தில் சூட்டு – கோட்டு அணிந்து நடித்தார். படம் வெற்றி பெற்றது. இப்படத்தில் அவருக்கு ஜோடியாக நடித்தவர் சரோஜாதேவி.

எம்.ஜி.ஆரும்,சரோஜாதேவியும் தொடர்ந்து 26 படங்களில் இணைந்து நடித்தனர். பெரும்பாலும் படங்களை தேவர் பிலிம்சார் எடுத்தனர். ஒவ்வொரு படமும் வெற்றி மேல் வெற்றி பெற்றன.

1965ஆம் ஆண்டில், பி.ஆர்.பந்துலு தயாரித்த ''ஆயிரத்தில் ஒருவன்'' படத்தில் எம்.ஜி.ஆரும், ஜெயலலிதாவும் இணைந்து நடித்தனர்.

இப்படம் பெரிய வெற்றி பெற்றது. அதைத் தொடர்ந்து ''காவல்காரன்'', ''குடியிருந்த கோயில்'', ''முகராசி'' முதலிய படங்களில் இருவரும் ஜோடியாக நடித்தனர்.

சினிமாத்துறையில் புகழேணியில் உயரே சென்று கொண்டிருந்த எம்.ஜி.ஆர் அரசியலிலும் உயர்ந்து கொண்டு போனார். தி.மு.கழகத்திலிருந்த இளைஞர்களின் நெஞ்சில் இடம் பெற்றார். ரசிகர்கள் இவரைப் புகழ் உச்சிக்குக் கொண்டு போனார்கள்.

கழகக் கொடியைத் தன் படங்களின் தொடக்கத்தில் காட்டினார். தி.மு.க பொதுக்கூட்டங்களில் பேசினார். நன்கொடைகளை வாரி வழங்கினார். இதன் காரணமாக அறிஞர் அண்ணா அவர்கள் எம்.ஜி.ஆரை, தன் ''இதயக்கனி'' என்று குறிப்பிட்டார்.

1967 தேர்தலில் பரங்கிமலை தொகுதியில் தி.மு.கழகத்தின் சார்பில் போட்டியிட்டார். அப்போது எம்.ஆர்.ராதா துப்பாக்கியால் சுட்ட பரபரப்பான சம்பவம் நடந்தது.

எம்.ஜி.ஆர் கழுத்தில் பாய்ந்த குண்டு, ஆபரேஷனில் அகற்றப்பட்டது. மறுபிறவி எடுத்தார். எம்.ஜி.ஆர் ஆஸ்பத்திரியில் படுத்துக்கொண்டே தேர்தலில் வெற்றி பெற்றார்.

1967 தேர்தலில் தி.மு.கழகம் ஆட்சியைப் பிடித்தது. அண்ணா முதலமைச்சரானார்.

1969இல் அண்ணா மறைவுக்குப் பின், தி.மு.க பொருளாளரானார்.

சினிமா உலகிலும், அரசியலிலும், கலைஞர் கருணாநிதியும், எம்.ஜி.ஆரும் நண்பர்களாக விளங்கி வந்தார்கள்.

கலைஞர் முதலமைச்சரான சில காலத்திற்கு பிறகு அவர்கள் நட்பில் விரிசல் ஏற்பட்டது. கட்சிக் கணக்கு முறையாக இல்லை என்று எம்.ஜி.ஆர் எண்ணினார். அதனால், தி.மு.கழகத்தினர்

சொத்துக் கணக்கைக் காட்ட வேண்டும் என்று எம்.ஜி.ஆர் பகிரங்கமாகப் பேசினார். அதைத் தொடர்ந்து ''அண்ணா தி.மு.க'' என்ற பெயரில் 29.10.1972இல் தனிக் கட்சி தொடங்கினார்.

தி.மு.க.வை விட்டு வெளியேறிய பின் அவர் நடித்து வெளிவந்த ''உலகம் சுற்றும் வாலிபன்'' படம், மற்ற படங்களை விட மாபெரும் வெற்றி பெற்றது. இப்படத்தில் அ.தி.மு.க கொடியை ஆரம்பத்தில் காட்டினார்.

1977இல் நடந்த தேர்தலில் அ.தி.மு.க. ஆட்சியைப் பிடித்தது. தமிழக முதல்வரானார் எம்.ஜி.ஆர். மக்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

1980 ஜனவரியில் நடந்த பாராளுமன்றத் தேர்தலில் அ.தி.மு.க தோல்வி அடைந்தது. எம்.ஜி.ஆர் மந்திரிசபை டிஸ்மிஸ் செய்யப்பட்டது. ஆனால், சில மாதங்களுக்குப் பின் நடந்த சட்ட சபைத் தேர்தலில் அ.தி.மு.க பெரும் வெற்றி பெற்று எம்.ஜி.ஆர் மீண்டும் முதல்வரானார்.

1984ஆம் ஆண்டு அக்டோபர் 5ஆம் தேதி உடல்நலக் குறைவு ஏற்பட்டு சென்னை அப்பல்லோ ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். அவருக்கு பக்கவாதம் ஏற்பட்டு, உடலில் வலது பக்கம் செயல் இழந்தது. இதனை விரிவாகச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

எமனை வென்ற எம்.ஜி.ஆர் 1985 பிப்ரவரி 4ஆம் தேதி சென்னை திரும்பி 10ஆம் தேதி மூன்றாவது முறையாகத் தமிழக முதலமைச்சரானார்.

எம்.ஜி.ஆர் ஆரோக்கியமாக இருந்தாலும், அவருக்குப் பேச்சு வரவில்லை. என்றாலும் விடாமுயற்சியுடன் பயிற்சிகள் பெற்று ஓரளவு பேசினர்.

1987 டிசம்பர் 23ஆம் தேதி அவர் உடல்நிலை மோசமடைந்தது. டாக்டர்கள் தீவிர சிகிச்சை அளித்தும் பலனின்றி அன்றிரவு 3 மணிக்கு (24ஆம் தேதி அதிகாலை) எம்.ஜி.ஆர் மறைந்தார்.

திரை உலகிலும், அரசியலிலும் ஒரு சகாப்தம் முடிந்தது.

எம்.ஜி.ஆர் இறுதி ஊர்வலம் டிசம்பர் 25ஆம் தேதி நடந்தது. பீரங்கி வண்டியில் அவர் உடல் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு, கடற்கரையில் அண்ணா சமாதி அருகே அடக்கம் செய்யப்பட்டது.

பிரதமர் ராஜீவ்காந்தியும், மத்திய மந்திரிகளும், அரசியல் தலைவர்களும் இறுதி மரியாதை செலுத்தினார்கள். லட்சக்கணக்கான மக்கள் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். மாபெரும் ஊர்வலத்தில் தங்கத் தலைவரை இழந்த மக்கள் கண்ணீர் அஞ்சலி செலுத்தினார்கள்.

சினிமாவிலும், அரசியலிலும் எம்.ஜி.ஆர் புரிந்த சாதனைகள் ஆச்சரியத்தை அளிப்பவை.

அவர் 136 படங்களில் நடித்துள்ளார். முதலமைச்சரான பிறகு அவர் படங்களில் நடிக்க விரும்பினாலும் நடிக்கவில்லை. அன்றைய பிரதமர் மொரார்ஜி தேசாயின் வேண்டுகோளின்படி நடிப்பு வேண்டாம் என்று முடிவு கட்டினார் எம்.ஜி.ஆர். மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன் படம், அவர் முதலமைச்சரான சில நாட்களுக்குப்பின் வெளிவந்தது.

''ரிக்ஷாக்காரன்'' படத்தில் அவருடைய நடிப்புக்காக இந்தியாவின் சிறந்த நடிகருக்கான ''பாரத்'' பட்டத்தை மத்திய அரசு வழங்கியது.

மறைவுக்குப்பின் அவருக்கு ''பாரதரத்னா'' பட்டம் வழங்கப்பட்டது. இந்தியாவில் வழங்கப்படும் உயரிய விருது இது.

எம்.ஜி.ஆருக்கு, ரசிகர்களும், தொண்டர்களும் ஏராளம். அவர் எதைச் செய்தாலும் அதை வேதவாக்காக ஏற்று செயல்பட்டார்கள்.

''கையில் பச்சை குத்திக் கொள்ள வேண்டும்'' என்று அவர் கூறியதும் அனைவரும் பச்சை குத்திக் கொண்டனர்.

வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட்டு, பல சோதனைகளில் வெற்றி கண்டு, சூப்பர் ஸ்டாராக உயர்ந்து, அரசியலில் மும்முறை முதலமைச்சரான எம்.ஜி.ஆர் மறைந்தாலும், மக்களின் உள்ளங்களில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

ஏழைகளிடம் அன்பு காட்டியவர். மாநில அரசும் – மத்திய அரசும் இணைந்து செயல்பட்டால் தமிழகம் பயன்அடையும் என்று நம்பியவர். தமிழகத்திற்கு பல நல்ல திட்டங்களை ஆட்சிப் பொறுப்பில் இருக்கும்போது செய்தார். காமராஜர் கொண்டுவந்த மதிய உணவு திட்டத்திற்கு புத்துயிர் கொடுத்து சத்துணவு திட்டமாக்கினார். திருக்கோவில்களில் சமபந்தி சாப்பாட்டிற்கும் ஏற்பாடு செய்தார்.

தினத்தந்தியில் ஆசிரியர் குழுவில் இருந்தவர் திரு சண்முகநாதன். உத்தமமானவர். நிறைய விஷயங்கள் தெரிந்த பண்பாளர். இவர் எழுதிய நூல்களில் எம்.ஜி.ஆரின் வாழ்க்கையில் நடந்த முக்கிய நிகழ்வுகளைப் பதிவு செய்திருக்கிறார். இவருடன் நட்பும் இவருடன் விவாதிக்க வாய்ப்பும் கிடைக்க காரணமாக இருந்தவர் என் இனிய நண்பர் கவிஞர் குடந்தை திரு கீதப்பிரியன் அவர்கள்தான்.



# யுத்த நிதி

1962ஆம் ஆண்டு இந்தியா மீது சீனா போர் தொடுத்தது. பிரதமர் நேரு யுத்த நிதி வேண்டி நாட்டு மக்களுக்கு அறிவிப்புக் கொடுத்தார். இந்த அறிவிப்பைக் கேட்டதும் இந்தியாவில் முதல் மனிதராக யுத்தநிதியாக ரூ.75 ஆயிரம் கொடுப்பதாக அறிவித்தார் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அன்றைய கால கட்டத்தில் இது பெரிய தொகை.

அது மட்டுமல்ல, அனைத்து இந்தியாவிலும் அவ்வளவு பெரிய தொகையை வேறு யாரும் கொடுக்கவில்லை.

அறிவித்ததோடு எம்.ஜி.ஆர். நிற்கவில்லை. முதல் தவணையாக ரூ.25 ஆயிரத்துக்கான காசோலையை எடுத்துக் கொண்டு அந்தக் காசோலையினை அன்றைய முதல்வர் காமராஜரிடம் ஒப்படைப்பதற்காக முதல்வர் காமராஜரின் திருமலைப் பிள்ளை ரோடு வீட்டுக்குச் சென்றார்.

அப்போது காமராஜர் வீட்டில் இல்லை. மதுரை பயணத்துக்காக எழும்பூர் ரயில் நிலையத்துக்குச் சென்று விட்டதாக செய்தி சொன்னார்கள்.

வெளியூர் பயணம் முடித்து காமராஜர் திரும்பி வரட்டும் என்று எண்ணாமல் தனது காரை வேகமாக ஓட்டி எழும்பூர் ரயில் நிலையம் சென்றடைந்தார். முதல்வர் காமராஜர் பயணம் செய்யும் ரயில் பெட்டியை நோக்கி விரைந்து சென்றார் புரட்சித் தலைவர்.

அங்கு எம்.ஜி.ஆரைக் கண்டதும் முதல்வர் காமராஜருக்கு ஆச்சரியம் காங்கிரசையும் காமராஜரையும் கடுமையாக விமரிசித்து வந்த முக்கியப் பிரமுகர் எம்.ஜி.ஆர். அவர் அவ்வளவு அவசரமாக காமராஜரை சந்திக்க வந்தது ஏன்?

ரயில் புறப்பட சிறிது நேரம் இருந்தது. காமராஜர் கீழே இறங்கி எம்.ஜி.ஆரைச் சந்தித்தார்.

பிரதமர் நேருஜியின் வானொலி உரையைக் கேட்டதையும், ரூ.75ஆயிரம் யுத்த நிதிக்கு நன்கொடையாக அளிக்க இருப்பதையும் தெரிவித்த எம்.ஜி.ஆர்., முதல் தவணையாக ரூ.25 ஆயிரத்துக்கான காசோலையை முதல்வர் காமராஜரிடம் கொடுத்தார். உடன் இருந்தவர்கள் கைதட்டி மகிழ்ந்தனர். ரொம்ப சந்தோஷம்ண்ணே என்றார் காமராஜர்.

இந்த செய்தி மறுநாள் பல பத்திரிகைகளிலும் வெளிவருமாறு காமராஜர் ஏற்பாடு செய்தார். இதற்கிடையில் பிரதமர் நேருஜி அவர்களுக்கு எம்.ஜி.ஆர். ஒரு கடிதம் எழுதினார்.

அந்தக் கடிதத்துக்கு பிரதமர் நேருஜி உடனே பதில் எழுதினார்.

அன்றைய காலகட்டத்தில் ரூ.75 ஆயிரம் என்பது, இந்திய தேசத்தின் பிரதமருக்கே மிகப்பெரிய தொகையாக மனதில் பதிந்திருக்கிறது. எனவே அவ்வளவு பெரிய தொகை அளித்த நன்கொடையாளருக்கு நன்றி தெரிவிக்க வேண்டுமே! வேறு யாரையாவது உதவியாளரை விட்டு பிரதமர் எழுதச் செய்திருக்கலாம் அல்லவா? அப்படிச் செய்யவில்லை. மாபெரும் நாட்டின் மகத்தான பிரதமர் பண்டித ஜவகர்லால் நேரு அவரே, தன் கைப்பட கடிதம் எழுதினார்.

நேரு எழுதிய கடிதம் இவ் அத்தியாயத்தின் கடைசியில் பிரசுரம் செய்யப்படுகிறது.

மதுரைக்கு காமராஜர் சென்றதும் நிருபர்கள் காமராஜரிடம் எம்.ஜி.ஆர் வேறு கட்சிக்காரர். அவரிடம் யுத்த நிதியை நீங்கள் பெற்றது சரியா?- என்கிற மாதிரி கேள்வி கேட்டார்கள்.

''அவருக்கு மனசு இருக்கு! அவரு தானே முதல்ல கொடுத்தார்? உங்களுக்கு கொடுக்க மனசு வருதா?- என்கிற மாதிரி காமராஜர் திருப்பிக் கேள்வி கேட்டார்.

இங்கே ஒரு விஷயத்தை நினைவில் கொள்ள வேண்டும் ''அண்ணா என் தலைவர் - காமராஜர் என் வழிகாட்டி'' என்று சொன்னவர் எம்.ஜி.ஆர். அண்ணா மீது மிகுதியான நம்பிக்கை கொண்ட எம்.ஜி.ஆருக்கு மாபெரும் தலைவரான

காமராஜடமிருந்து கொள்கை வேறுபாடு இருந்ததே தவிர காமராஜரின் தியாகத்தையும் அவரின் செயல்பாடுகளையும் எம்.ஜி.ஆர். அறிந்தே இருந்தார். நேருவின் மீது அக்கறை கொண்டவர் எம்.ஜி.ஆர். ராணுவ கேப்டன் ஒருவருக்கு கடிதம் எழுதிய போது இராணுவ வீரர்களுக்கு உத்வேகம் கொடுக்கும்படி நீண்ட கடிதம் எழுதினார் எம்.ஜி.ஆர். அதில் ஒரு பகுதியை அடுத்த அத்தியாத்தில் பார்க்கலாம்.

<u>நேருவின் கடிதம்</u>:

*எண் 556/ பி.எம்.ஓ.62*
*27 அக்டோபர் 1962.*

அன்புள்ள ஸ்ரீ ராமச்சந்திரன்,

அக்டோபர் 22 தேதியிட்டு, நீங்கள் எழுதிய கடிதம் கிடைக்கப் பெற்றேன். போர்முனையில் உள்ள நம் ராணுவ வீரர்களின் பயனுக்காக தாராளமான முறையில் ரூபாய் 75 ஆயிரத்தை பெருந்தன்மையான மனத்துடன் வழங்கியமைக்கு நான் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். இதில் ரூ.25 ஆயிரத்தை தமிழக முதல்வர் ஸ்ரீ காமராஜ் அவர்களிடம் தாங்கள் கொடுத்திருப்பதாக அறிகிறேன். மீதி தொகையும் அடுத்து அளிக்கப்படும் என்றும் அறிகிறேன்.

தங்கள் உண்மையுள்ள
ஜவகர்லால் நேரு

ஸ்ரீ.எம்.ஜி.ராமச்சந்திரன்
*160,* லாயிட்ஸ் சாலை,






No. 556-PMO/62

New Delhi,
27th October, 1962.

Dear Shri Ramachandran,

I have received your letter of the 22nd October. I am grateful to you for your generous donation of rupees seventy five thousand for the benefit of our soldiers on the front. I note that you have given rupees twenty five thousand of this to Shri Kamaraj, Chief Minister of Madras, and the balance will be paid in due course.

Yours sincerely,

Shri M.G. Ramachandran, MLC,
160, Lloyds Road,
Madras 14.

நேருவின் கடிதம்

சென்னை – 600 014.

## கேப்டனுக்கு எழுதிய கடிதம்

அன்புச் சகோதரர் கேப்டன் திரு.எம்.சின்னப்பன் அவர்கட்கு

எனது வணக்கமும் நன்றியும் உரித்தாகுக!

எனினும் தங்களது ஆழ்ந்த நல்லெண்ணம், நாட்டுப் பற்று, தியாக உணர்வு, என்பால் கொண்டுள்ள உறவு, பாசம் அத்தனையும் அதில் மிகத் தெளிவாகவும் விரிவாகவும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

என்மீது தாங்கள் வைத்துள்ள நம்பிக்கையை நிறைவேற்றும் தகுதி எனக்கு இருக்கின்றதோ இல்லையோ, நானறியேன், எனினும் தங்களது நம்பிக்கை தோல்வியடையாத நிலையில் எனது எதிர்கால வாழ்க்கையும் செயலும் அமைய நிச்சயம் நான் முயலுவேன்.

நானும் நமது நாட்டு மக்களும் பெருமையும் மகிழ்ச்சியும் பெறும் அளவில் தங்களது கடிதத்தில் தந்துள்ள செய்தி உயர்ந்தோங்கி நிற்கின்றது என்பதைப் பெருமகிழ்வோடு தெரிவித்துக் கொள்கிறேன். தியாகம் என்பது பிறரால் சொல்லிக் கொடுக்கப்படும் ஒன்றல்ல. ஆனால் பிறரால் தரப்படும் ஒன்றாகும். அது சமுதாயத்தாலும் இருக்கலாம். நண்பனாலும் அல்லது எதிரியாலும் உருவாக்கப்படலாம். சமுதாயத்திற்காக சீர்திருத்தவாதிகளோ, அரசியல்வாதிகளோ தியாகம் செய்வார்கள்.

நட்புக்காக தமது வாழ்க்கையையும் இழந்துவிடலாம் அது போலவே எதிரியால் மிக உயர்ந்த தியாகத்திற்கு ஒருவர் ஆளாக்கப்படலாம். இவையெல்லாம் அவ்வப் போது சூழ்நிலையால் ஏற்படுத்தப்படுகின்ற வாய்ப்பினால் தியாகம் செய்வதாகும்! ஆனால் உங்களைப் போன்ற வீரர்கள் வீரராகத் தம்மைப் பதிவு செய்து கொள்ளும் போதே,

சமுதாயத்துக்காகவும், எத்தனையோ பகுதிகளை ஒன்றாக்கிக் கொண்டிருக்கிற நாட்டுக்காகவும் தம்மை அர்ப்பணிக்கும் வேள்வியில் முன்னதாகவே அறிந்து உட்பட்டு ஆட்பட்டுத் தம்மைத் தியாகிகளாகவே உருவாக்கிக் கொண்டு வருகின்றவர்கள்.

''நாங்கள் பின் வாங்கவும் இல்லை, பயந்துவிடவுமில்லை'' என்ற வார்த்தைகளில் தான் எத்தனை உயர்வான உங்கள் உள்ளம் தெளிவாக்கப்பட்டுவிட்டது.

இராமச்சந்திரன் என்ற இராணுவத் தோழர் மறைந்ததையும் அந்த இடத்தில் அவரது சடலத்தைத் தகனம் செய்து அவரது ஆத்மா சாந்தி பெற நீங்களும் ஏனைய நமது சகோதர்களும் அஞ்சலி செலுத்தியதையும் படிக்கும் போது என்னைப் போன்றவர்கள் கண்ணீர் உகுப்பதோடு மட்டுமே மனநிறைவு கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இந்த இராமச்சந்திரன் கொடுத்து வைத்தவர். ஆனால் இந்த கடிதத்தை உங்களுக்கு எழுதும் இந்த எம்.ஜி.இராமச்சந்திரனோ என்றும் நாடு வாழ மொழி வாழ இனம் வாழ நான் வாழ்வேன் என்றும் இந்த இடத்தில் சூளுரைக்கின்றேன்.

எனினும் தங்களது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் இன்னொரு வாக்கியம் என்னைத் தேற்றவும் உதவுகிறது; எனது கடமையைப் பெற எழுச்சி பெறச் செய்கிறது.

'ஒரு கோடி இராமச்சந்திரனை உங்களால் உருவாக்க முடியுமே' என்ற கருத்து தான்.

என் மீது இவ்வளவு மகத்தான நம்பிக்கை வைத்திருக்கும் உங்களின் அன்பு இயற்கையாக எனக்கில்லாத ஒன்றை உண்மையான ஒன்றாக மாற்ற முயலுகிறது.

நாட்டுக்காக வீர மரணம் எய்திய திரு.இராமச்சந்திரன் அவர்களைப் போல் ஒரு கோடிப் பேரை உருவாக்க என்னால் முடியாமற் போயினும் ஒரு சிலரையாவது உருவாக்க நான் நிச்சயம் முயன்று பார்ப்பேன்.

இத்தகைய வீரர்கள் தோற்றுவிப்பதும் ஊக்குவிப்பதும் தான்

எனது பணி என்று நான் எனது நாட்டுத் தொண்டுக்கு முற்றுப்புள்ளி வைத்துக் கொள்ள மாட்டேன். இந்த முயற்சி துவக்கப் பணி என்றே நான் கொள்ளுகிறேன்.

நான் போர்க்களத்திற்கு நேரில் வந்து உங்களையெல்லாம் போல் தொண்டும் – தியாகமும் செய்ய முடியாமற் போயினும் வேறு வகையில் தொண்டு செய்ய முன் வருவேன். நாட்டைக் காக்கவும், நமது வருங்கால சந்ததிகளுடைய சுதந்திரத்தைக் காக்கவும் போராடும் உங்களைப் போன்ற வீரர்களின் குடும்ப நலத்தைப் பேணிப் பாதுகாக்கும் பெரும் பொறுப்பினை நமது இந்திய பேரரசும், அந்தந்த மாநில அரசுகளும் ஏற்றுக் கொண்டிருப்பினும் மக்களும் நேரடியாகப் பொறுப்பேற்கக் கடமைப் பட்டவர்களாவார்கள்.

இந்த எனது கருத்தினை தமிழக மக்கள் நன்கு உணர்ந்திருப்பினும் மேலும் அவர்கள் தொடர்ந்து மிக மிக அக்கறையோடு ஒத்துழைப்பு கொடுக்க முன் வரும்படி என்னாலானான தொண்டினை நிச்சயம் செய்வேன். இப்படிச் செய்வதன் மூலம் தங்களது தியாகத்திற்கு ஈடாக நானும் ஒரு நாட்டுப் பணியை செய்து விட்டேன் என்று திருப்திப்படுத்திக் கொள்ளும் ஒரு கருத்துக்குருடனாக என்னை ஆக்கிக் கொள்ள மாட்டேன்.

குண்டு வீச்சுக்களுக்கு இடையில் கடிதம் எழுதும் உங்களது துணிவில் 'தமிழன் மேல், தமிழ் நாட்டின் மேல் இந்தியத் துணை கண்டத்து வாழ்வின் மேல் அக்கறையுள்ள ஒரு வீர இளைஞரின் எஃகு இதயத்தை' நான் காணுகின்றேன். உங்களைப் போன்ற வீர மிக்கவர்களின் தியாகத்தை அடையப் பெற்றதாகும் இந்த நாடு.

அன்பு அண்ணன்

எம்.ஜி.ராமச்சந்திரன்

இந்தக் கடிதத்தைப் படிக்கும்போது எம்.ஜி.ஆர் அவர்களின் நாட்டுப்பற்று மட்டுமல்ல பல தேசாபிமானிகளை அவரால் உருவாக்க முடியும் என்று புரிகிறது. ராணுவ வீரர்களை மதிக்க வேண்டும் என்ற நினைப்பும் ஏற்படும். தியாகம் என்பதற்கு ஒரு பெரிய விளக்கத்தையே இக்கடிதத்தின் மூலம் எம்.ஜி.ஆர்

தெளிவுபடுத்துகிறார். இந்தக் கடிதத்தை என்னிடம் காட்டிய ஆர்.சீனிவாசமூர்த்தி எம்.ஜி.ஆர் அவர்களிடம் பத்திரிகை தொடர்பாளாராக இருந்தவர். என் தாத்தா உறவு முறைக்காரர் ஏ.என்.எஸ் அவர்களிடம் அன்பு கொண்டவர்.

சீனிவாச மூர்த்தி அவர்கள் எழுதிய நூலிலும் இக்கடிதம் இடம் பெற்றுள்ளது.

எம்.ஜி.ஆர் மற்றவர்களின் மனதைப் புரிந்துக் கொள்ளக் கூடியவர். அடுத்தவர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்கக் கூடியவர்.



# எம்.ஜி.ஆருக்கு தொல்காப்பியம் தெரியுமா?

தமிழ் நூல்களுள் காலத்தால் முதன்மையானது தொல்காப்பியர் எழுதிய 'தொல்காப்பியம்' ஆகும். தொல்காப்பியர் தமிழ் முனியான அகத்தியருடைய பன்னிரு மாணவர்களுள் ஒருவர். தொல்காப்பியம் அகத்தியருடைய முதல் நூலான அகத்தியத்தின் வழி நூலாகும்.

இந்நூல் நம்பியகப் பொருளைப் போல் நிகழ்ச்சி அடிப்படையில் அமையாது கூற்று அடிப்படையில் அமைந்துள்ளது. வேறு எந்த மொழி இலக்கணத்திலும் கூறப்படாத நிலப்பாகுபாடு, நிலங்களின் மக்கள், ஏனைய உயிர்கள், மரங்கள், செடிகள், மலர்கள், மக்களது ஒழுக்கங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைச் சொன்ன முதல் தமிழ் நூல் என்ற சிறப்பு தொல்காப்பியத்திற்கு உண்டு. இரண்டாம் குலோத்துங்கன் அரசவைப் புலவர் தொல்காப்பியத்தை 'வடுவில் காப்பியம்' என்று வழங்குகிறார்.

எம்.ஜி.ஆர் அவர்களைப் பற்றி எழுதும் கட்டுரையில் தொல்காப்பியம் எதற்கு? – என்று இதைப் படிக்கும் வாசகர்கள் புருவத்தை உயர்த்துவது புரிகிறது. எம்.ஜி.ஆர் அவர்கள் தொல்காப்பியத்தைக் கற்று வைத்திருந்தார் என்பது மட்டுமல்ல, அதைச் சரியாகப் படித்திருக்கிறார் என்பதும் இக்கட்டுரையைப் படித்ததும் நீங்கள் முடிவுக்கு வரலாம்.

கம்பன் கழகம் நடத்தும் போட்டியிலே வெற்றி பெற்றவர்களுக்கு பரிசளிக்கும் முன்னால் அவர்கள் அந்த மேடையிலே பேசிட வாய்ப்பளிப்பது வழக்கம். சேலம் விழாவில் சில இளைஞர்கள் பேசினார்கள்.

அதாவது அவர்கள் பேசும்பொழுது தமிழ் இலக்கணத்திலே மெய்ப்பாடு என்று ஒன்று உண்டு. தொல்காப்பியத்திலே மெய்ப்பாட்டு இயல் என்ற ஒரு இயலே உண்டு.

அந்த மெய்ப்பாட்டு இயலின்படி மெய்ப்பாடுகள் எட்டு என்பதே தொல்காப்பியருடைய கருத்து என்று வலியுறுத்தினார்கள்.

தலைமை தாங்கிய எம்.ஜி.ஆர் பேசினார். ''நகை, அழகை, இழிவரால், மருட்கை, அச்சம், பெருமிகம், வெகுளி, உவகை என்பது எட்டும் மெய்ப்பாடுகள் என்று தொல்காப்பியர் கூறுவார்.

இந்தப் பிள்ளைகள் பேசும்பொழுது இந்த எட்டையும் பேசிவிட்டு சமநிலை என்ற ஒன்றையும் சேர்த்து ஒன்பதாக்கினார்கள் என்று சொன்னார்கள். தமிழ் இலக்கண மரபுப்படி உள்ள மெய்ப்பாடு எட்டுத்தான். சமநிலை என்பது வடமொழி இலக்கியத்தில் இருந்து வந்து பின்னால் சேர்ந்தது'' என்று எம்.ஜி.ஆர் பேசியதும் கூட்டம் கரகோஷம் செய்தது.

பேச்சை முடித்து விட்டு நீதிபதி இஸ்மாயில் பக்கத்தில் வந்து அமர்ந்தார். அப்பொழுது ''இது எப்படி உங்களுக்குத் தெரியும்'' என்று நீதிபதி கேட்டார்.

''தொல்காப்பியம் படித்திருக்கிறேன்'' என்று எம்.ஜி.ஆர் சொன்னார். சினிமாவிலே நடித்துக் கொண்டு இருந்த ஒருவர் தொல்காப்பியம் படித்திருக்கிறார் என்பது எனக்கு மிக்க ஆச்சரியமாக இருந்தது என்கிறார் நீதிபதி இஸ்மாயில்.

காரணம் என்னவென்றால் தொல்காப்பியத்தை நானே முழுமையாகப் படித்ததில்லை. இன்றையத் தமிழாசிரியர்களே தொல்காப்பியத்தை முழுமையாகப் படித்தறியாதவர்கள் என்பது நிச்சயமாக எனக்குத் தெரியும். இப்படி நீதிபதி இஸ்மாயில் அவர்கள் சொல்கிறார்கள். இவர் சென்னைக் கம்பன் கழகத்தின் தலைவராக இருந்தவர். இந்தியாவில் சிறந்த நீதிபதிகளில் ஒருவராகத் திகழ்ந்தவர்.

இனிமையும், நடை எளிமையும், கருத்தாழமும் கொண்ட ராமாயணத்தை கல்வியில் பெரியவரான கம்பர் பாடினார். கம்பர் தமது நூலுக்கு 'இராமாவதாரம்' என்னும் பெயரே இட்டார். உலக மகாகவிகளுள் ஒருவரென வைத்து எண்ணத்தகும் கம்பர் 'கவிச் சக்கரவர்த்தி' எனவும் அழைக்கப் பெறுகின்றார். 'தமிழுக்குக் கதியாவார் இருவர். ஒருவர் கம்பர்;

மற்றவர் திருவள்ளுவர்' என்று ஒரு கூட்டத்தில் இந்தியாவின் முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல்கலாம் அவர்கள் பேசினார்கள்.

'புகழ்கம்பன் பிறந்த தமிழ்நாடு' எனப் பாரதியாரால் பாராட்டப்பெறும் இப்புலவர் ஏரெழுபது, திருக்கை வழக்கம், சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, இலக்குமியந்தாதி முதலான நூல்களையும் பாடியுள்ளார்.

சமஸ்கிருத கதையினைத் தமிழ் மரபுக்கேற்ப ஆசிரியர் பாடிச்சென்றுள்ள திறத்தினை நூலில் காணலாம். இக்காப்பியத்தில் ஓசைநயம் குறிப்பிடத்தக்கது. குகன் தன் படைவீரர்களுக்குக் கூறும் பாடல்களைச் சான்றாகக் கூறலாம். அவற்றுள் ஒன்று:

**போன படைத்தலை வீரர் தமக்கிரை போதாஇச்**
**சேனை கிடக்கிடு தேவர் வரிற்சிலை மாமேகம்**
**சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடும்**
**தானை படத்தனி யானை படத்திரள் சாயேனோ.**

தருமத்தின் தனிமூர்த்தியாக நிற்கும் இராமன் தனது தாய் கோசலைக்கும் அறமுரைக்கின்றான்.

**"என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்**
**மன்னர் மன்னனை வற்புறுத்தா துடன்**
**துன்னு கானம் படரத் துணிவதே**
**அன்னை யேஅறம் பார்க்கிலை.''**

என்று பேசும் இராமனுக்குத் துணையாகத் தருமத்தின் தனிமை தீர்ப்பவனாக அனுமனைக் காட்டுகின்றார் கம்பர்.

**''ஆற்றலும் நிறையும் கல்வி அமைதியும் அறிவும் என்னும்**
**வேற்றுமை இவனோ டில்லை.''**

என அனுமனைப் பற்றிய எண்ணமும் இராமனுக்கு ஏற்படுகின்றது.

கவிதையின் சிறப்பு அதனைப் பாடும் புலவனுக்கு நன்கு தெரியும். ஆகவே தான் கோதாவரி நதியினைப் பாடவந்த கம்பர் 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' எனப் பேசுகின்றார்.

இப்படிப்பட்ட ராமகாவியம் புரட்சித் தலைவருக்கு அத்துப்படி. அதே விழாவில் சில கம்பராமாயண வரிகளையும் கோடிட்டு காட்டினார்கள். இதுவும் எப்படி சாத்தியம்? என்று நீதிபதி இஸ்மாயில் கேட்டுவிட்டார்.

''நான் சிறுவனாக இருந்த போது சம்பூர்ண ராமயணத்தில் நடித்திருக்கிறேன். அப்போது மனப்பாடம் செய்தேன். இளமையில் கற்பவை எந்நாளும் மறக்காது. நாடகத்தில் நடிப்பவர்களுக்கு மனை சக்தி உண்டு என்றாராம் எம்.ஜி.ஆர்.

எம்.ஜி.ஆர் சினிமா நடிகர் என்று நினைப்பவர்கள் அவருக்கு நடிப்பை தவிர வேறு எதுவும் தெரியாது என்று நினைத்ததும் உண்டு. உண்மையில் எம்.ஜி.ஆர். ஒரு சர்வகலா வல்லவர். தமிழ் இயக்கத்தின்மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

*1983* ஆம் ஆண்டு டிசம்பர் *10,11* தேதிகளில் சேலத்தில் நடந்த கம்பன் விழாவில் தான் மேற்கண்ட சொற்பொழிவை நடத்தினார் புரட்சித் தலைவர். அவருடைய தமிழ் ஞானத்தை உலகமே கண்டு அதிசயத்தது. இந்தியாவின் தலைசிறந்த நீதிபதி இஸ்மாயிலும் உறுதிப்படுத்துகிறார். இதை விட எம்.ஜி.ஆரின் மொழி அறிவுக்கு என்ன சான்று வேண்டும்?



# யாரையும் மட்டம் தட்டுவது பிடிக்காது

தன்னுடைய நடிப்பில் தனக்கென்று ஒரு பாணியை அமைத்திருந்தவர் எம்.ஜி.ஆர். இந்தி நடிகர்களைப் பார்த்து 'காப்பி' செய்கிற வழக்கம் எல்லாம் அவரிடம் கிடையாது.

மேடையில் பேசும் போது தனக்கு சரியென்று எது படுகிறதோ அதைப் பேசுவார். அது யாராக இருந்தாலும் அவர்கள் மனம் நோகும்படி அவர்கள் துயர் கொள்ளும்படி அமைந்தால் மேடையிலேயேக் கண்டிப்பார்.

சென்னை மியூசிக் அகடெமியில் ஒரு விழா. மேடையில் எம்.ஜி.ஆர் அவர்களின் அண்ணன் மகன் மிமிக்கரி செய்து கொண்டிருந்தார்.

கீழே பார்வையாளர்கள் மத்தியில் எம்.ஜி.ஆர். பத்திரிகையாளர் பகுதியில் நானும் அமர்ந்திருந்தேன்.

கிருபானந்த வாரியாரை மிமிக்கிரி செய்ததைக் கூட்டம் கை தட்டி வரவேற்றது. எம்.ஜி.ஆரும் மிமிக்கிரியை ரசித்தார். ஆனால் கிருபானந்த வாரியார் வயோதிகம் காரணமாக வாய்க்குள் நாக்கைக் கழற்றுவரைப் போன்று மிமிக்கிரி செய்தவரும் செய்து காட்டியதை எம்.ஜி.ஆர் ரசிக்கவில்லை!

''மேடை ஏறினார் எம்.ஜி.ஆர் ''இளைஞர்களுக்கு ஒன்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். கலையைக் கலையாகப் பாருங்கள். கலையில் அடுத்தவர்களை கேலி செய்யும் போக்கு இருக்கக்கூடாது. வாரியாரை மிமிக்கிரி செய்யுங்கள். ஆனால் அவருடைய இயலாமையை வெளிச்சம் போட்டுக் காட்டாதீர்கள். வாரியார் உயர்ந்தவர். இன்றைய வாரியாரின் வயோதிக நிலையை நாளை நாமும் அடையலாம் என்பதை இளைஞர்கள் உணர வேண்டும்'' இப்படி எம்.ஜி.ஆர் பேசியதும் மிமிக்கிரி செய்தவர் உடனடியாக கூட்டத்தில் மன்னிப்பு கேட்டுக் கொண்டார்.

நடிகர் திலகம் சிவாஜியும்– எம்.ஜி.ஆரும் போட்டியாளர்கள் என்ற நினைப்பு தான் பலருக்கு உண்டு. ஆனால் உண்மையில் இருவரும் நல்ல நண்பர்கள். சிவாஜியை வேதனைப்படுத்தும் எந்த நிகழ்ச்சியையும் எம்.ஜி.ஆர் ஊக்குவித்ததில்லை! வாரியாரைக் கிண்டல் செய்தவரை கண்டித்ததைப் போல நகைச்சுவை நடிகர் பாண்டுவும் ஒரு சம்பவத்தை சொல்கிறார்.

''நடிகர் திலகம் சிவாஜியின் பல்வேறு வகையான முகபாவங்கள் கொண்ட புகைப்படங்களை அழகாய் வெட்டி, மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். முகம் வருவது போல் அவைகளை ஒட்டி ஒரு வார இதழுக்கு அனுப்பி வைத்தேன். அவர்களும் அதைப் பிரசுரித்து எனக்கு சன்மானமாக ரூ.100 அனுப்பி வைத்தார்கள்.

அருகே வைத்துப் பார்த்தால் சிவாஜி முகங்கள் வெட்டி ஒட்டிய படங்கள் தெரியும். சற்றுத் தள்ளி வைத்துப் பார்த்தால் எம்.ஜி.ஆர். உருவம் மட்டும் தெரியும்.

இந்தப் படம் பிரசுரமாகிய உடன் அதை எடுத்துக் கொண்டு என் அண்ணன் இடிச்சபுளி செல்வராஜ் மூலம் எம்.ஜி.ஆரிடம் காண்பித்தேன். பாராட்டி பரிசு கொடுப்பார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் எம்.ஜி.ஆர். ''இதை சிவாஜி பார்த்து எவ்வளவு வருத்தப்பட்டிருப்பார்னு உனக்குத் தெரியுமா? ஒரு மனிதனைப் பாராட்டி பேர் வாங்கினாத்தான் பெருமை. ஒருத்தரை மட்டம் தட்டி பேர் வாங்கினா அது 'பேர்' கிடையாது... இனிமே இது மாதிரி செய்யாதே'' என்று எச்சரித்து அனுப்பினார். எனக்கு என்னவோ போல் ஆகிவிட்டது.

இதே பாண்டு எம்.ஜி.ஆரிடம் பரிசு வாங்கியவர். உலகம் சுற்றும் வாலிபனுக்கு டிசைன் டிசைனாக போஸ்டர் செய்து ஊர் முழுக்க காரில் ஒட்ட ஐடியா கொடுத்தவர். புரட்சித் தலைவர் பாராட்டும் போதும் தவறமாட்டார்! பிரபல பத்திரிகையாளர் திரு மேஜர்தாசன் என்னிடம் சொன்ன தகவல் இது.



# மனிதாபிமானம்

என்னுடைய அரசியல் குருநாதர் ஹரிஹர சுப்பிரமணியம் காமராஜரால் ஆம்பூர் அம்பி என்று அழைக்கப்பட்டவர். காங்கிரஸ் தியாகி. *1980*களில் நானும் இவரும் நெல்லை சென்டிரல் தியேட்டரில் இருந்து கொண்டு எம்.ஜி.ஆரின் வருகையைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

திருநெல்வேலி மாவட்டத்தில் நெல்லை டவுனில் ஒரு நிகழ்ச்சியை முடித்து விட்டு நேராக பாளையங்கோட்டை செல்கிறார் எம்.ஜி.ஆர். இதுதான் ஏற்பாடு.

சில ரிக்ஷாக்காரர்கள் சென்டிரல் திரையரங்கு அருகில் கூடிக் கொடிக் கம்பத்தில் அ.தி.மு.க கொடியை எம்.ஜி.ஆர் ஏற்ற ஏற்பாடு செய்திருந்தார்கள். இது நிகழ்ச்சி நிரலில் இல்லை. எனவே எம்.ஜி.ஆரின் கார் அந்த இடத்தைக் கடந்தது.

''அண்ணே! ரிக்ஷாக்காரனா நடிச்சிட்டு எங்களைப் பாராம போறீங்களே அண்ணே!'' மைக்கில் உடன் குரல் கேட்ட ரோட்டில் எம்.ஜி.ஆரின் கார் நின்றது.

எம்.ஜி.ஆர் என்னும் மாபெரும் நடிகர் ரோட்டில் பின்னோக்கி நடந்து வந்து ரிக்ஷாக்காரர்களைக் கட்டித் தழுவிக்கொண்டார். அவர்கள் கேட்டுக் கொண்டபடி கொடியேற்றினார். இதை நான் நேரிடையாகப் பார்த்தேன். அங்கே போலித்தனம் இல்லை. மனிதரை மதிக்கும் மனிதாபிமானம் தான் தெரிகிறது.

இயற்கையிலேயே கொடை உள்ளமும் ஏழைகளை மதிக்கும் மனப்பக்குவமும் எம்.ஜி.ஆரிடமிருந்தது. இன்னொரு சம்பவம் இதை எம்.ஜி.ஆரிடம் மெய்க்காப்பாளராக இருந்த திரு ராம கிருஷ்ணன் சொல்கிறார். இங்கே ஒரு விஷயத்தை நான் சொல்ல வேண்டும். திரு ராமகிருஷ்ணன் அவர்கள் பலமுறை எம்.ஜி.ஆர் அவர்களை நான் பார்க்க உதவி செய்தவர். அந்த நன்றிக் கடனாக இவர் எழுதிய கட்டுரைகளை நான் ஆசிரியர் பொறுப்பில் இருக்கும் கலைமகளில் பிரசுரம் செய்தேன். இவருடைய மகன் திரு கோவிந்தராஜ் அவர்களும்

அப்பா சொல்லச் சொல்ல எம்.ஜி.ஆர் பற்றி கட்டுரைகள் எழுதக் கூடியவர். இனி அவர்கள் சொன்ன சம்பவம்.

எம்.ஜி.ஆரின் குணங்களிலேயே அனைவராலும் போற்றப்பட்டது அவரது மனிதநேயம் தான்.

1977–ல் எம்.ஜி.ஆர். தேர்தலில் நின்று வெற்றி பெற்று தமிழ்நாட்டின் முதல்வராகப் பதவி ஏற்றிருந்த சமயம். எம்.ஜி.ஆருக்கு எல்லா மட்டங்களிலும் ரசிகர்கள் உண்டு. எம்.ஜி.ஆரின் உயர்மட்ட விசிறிகளில் குறிப்பிடத்தக்கவர் கர்நாடக மாநிலத்தில் அப்போது முதலமைச்சராக இருந்த காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த குண்டுராவ்.

பெங்களூரில் உள்ள தன் வீட்டுக்கு வரவேண்டும் என்று குண்டுராவ் எப்போதும் அழைத்துக் கொண்டே இருப்பார். குண்டுராவின் பிறந்த நாளன்று, பெங்களூருக்கு நேரில் சென்று, அவரை வாழ்த்த வேண்டும் என்று முடிவு செய்தார் எம்.ஜி.ஆர்.

பிற்பகலில், டிஎம்எக்ஸ் 4777 என்ற எண்ணுள்ள பச்சை அம்பாசிடர் காரில் கிளம்பினார் எம்.ஜி.ஆர். அவருடன், அவரது மனைவி ஜானகி அம்மா, ஜானகி அம்மாவின் சகோதரர் நாராயணனின் மகள் லதா இருவரும் வந்தனர். மற்றொரு வேனில் நாங்கள் அவர் வண்டியைப் பின்தொடர்ந்தோம். நாங்கள் என்பது மெய்க்காப்பாளர் ராமகிருஷ்ணன் மற்றும் மற்ற அதிகாரிகள்.

மறுநாள் காலை ஒன்பது மணிக்கு கர்நாடக முதல்வர் குண்டுராவ் வீட்டுக்குச் சென்றோம். பெரிய பார்சல் ஒன்றை அவருக்கு பிறந்தநாள் பரிசாக அளித்தார் எம்.ஜி.ஆர். எம்.ஜி.ஆரின் உதவியாளர் ஐ.ஏ.எஸ். அதிகாரி பரமசிவம். செக்யூரிட்டி ஆபீஸர் கண்ணுசாமி உடன் இருந்தனர். பால் பாயாசத்தோடு எங்கள் அனைவருக்கும் நன்றாக சைவ சாப்பாடு அளிக்கப்பட்டது. சாஷ்டாங்கமாக எம்.ஜி.ஆரின் காலில் விழுந்து நமஸ்கரித்தார் குண்டுராவ். அவரை மனதார வாழ்த்தினார் எம்.ஜி.ஆர்.

பத்து மணிக்கு மேல் அங்கிருந்து கிளம்பினோம். அப்போது எம்.ஜி.ஆர். தான் வரும் அம்பாசிடர் காரில் திரு ராமகிருஷ்ணனையும் வரச் சொன்னார். 11 மணிக்கு மேல்

ஓசூர் வரும்போது நல்ல வெயில். காரில் பயணம் செய்யும்போது எம்.கே.தியாகராஜ பாகவதர் பாடிய பாடல்களை எப்போதும் ரசித்துக் கேட்பார் எம்.ஜி.ஆர்.

ஓசூர் தாண்டியிருப்போம். இடது பக்கம் நெடுஞ்சாலை ஓரத்தில் வயதான கிழவி மற்றும் பத்து வயது சிறுமி இருவரும் தலையில் பெரிய புல்கட்டை சுமந்தவாறே காலில் செருப்பு இல்லாமல் வெயிலில் தவித்துக் கொண்டிருந்தனர். கொஞ்ச தூரம் நடந்து பிறகு வெயிலுக்காக ஓரமாக நின்று மீண்டும் நடை.

'ராமசாமி காரை, நிப்பாட்டு...' என்று டிரைவர் ராமசாமியிடம் சொன்னார் எம்.ஜி.ஆர். 'ராமு, போய் அவங்களை விசாரித்து விட்டு வா' என்றார். ராமகிருஷ்ணன் என்ற என் பெயரை பல நேரத்தில் 'ராமு' என்று சுருக்கியே அவர் கூப்பிடுவார்.

'கால் சுடுதய்யா நிற்கிறோம்...' என்றார் அந்தக் கிழவி. 'தூரத்திலிருந்து புல்லை அறுத்து, கட்டிச் சுமந்து சென்று விற்றால் தலைச்சுமைக்கு பன்னிரெண்டு அணா கிடைக்கும்...' என்றார். எம்.ஜி.ஆரிடம் வந்து சொன்னார் ராமு.

தன் மனைவி ஜானகி அம்மா, லதா இருவரிடம் அவர்கள் அணிந்திருந்த செருப்புகளைக் கழற்றச் சொன்னார். காரில் பயணம் செய்யும்போது எப்போதும் ஒரு கறுப்பு பெட்டியில் பணம் வைத்திருப்பார். அதிலிருந்து ஆயிரம் ரூபாயை எடுத்து 'அவர்களிடம் கொடு...' என்றார்.

இரு ஜோடி செருப்புகளையும் எடுத்துக் கொண்டு போய் அவர்களிடம் கொடுத்து, எம்.ஜி.ஆர். கொடுக்கச் சொன்னார். என்று ஆயிரம் ரூபாயையும் கொடுத்தேன். அப்படியே நெகிழ்ந்து போயினர். எதிர்பாராமல் இவ்வளவு பணம் கிடைத்ததில் அவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. நன்றி கூட சொல்லாமல் அப்படியே நின்றனர்.

காரின் கண்ணாடியை இறக்கி வணக்கம் தெரிவித்தார் எம்.ஜி.ஆர். அங்கிருந்து நாங்கள் புறப்பட்டோம்.

இதுதான் எம்.ஜி.ஆர். இங்கே மிளிர்வது அவரின் மனிதாபிமானம் தான்! வாரி வாரிக் கொடுத்த கை

அவருடையது. ஏழைகளைக் கண்டால் அவர் சும்மா எப்போதும் அனுப்பியதில்லை. ''வீட்டில் அடுப்பில் உலை வைத்துவிட்டு எம்.ஜி.ஆரின் வீட்டுக்குப் போய் நின்றால் நிச்சயம் அரிசி கிடைக்கும்'' இப்படிச் சொன்னவர் என் நண்பர் துக்ளக் ஆசிரியர் சோ.ராமசாமி.

எம்.ஜி.ஆருக்கு வி.ஐ.பிகளிலேயே பல விசிறிகள் இருந்தனர். அவர்களில் முக்கியமானவர் ஆந்திர முன்னாள் முதல்வர், மறைந்த என்.டி.ராமராவ். எப்போதும் 'அண்ணா' என்றே மரியாதையாக எம்.ஜி.ஆரைக் குறிப்பிடுவார் என்.டி.ஆர். ஆந்திர திரைப்பட உலகில் எம்.ஜி.ஆரைப் போல, 'மக்களால் மிகவும் விரும்பப்படும் ஹீரோவாகத் திகழ்ந்த என்.டி.ஆருக்கு, 'ஆந்திர எம்.ஜி.ஆர்' என்று திரை உலகிலும் மக்களிடமும் பெயர் உண்டு.

அரசியலில் முழுமையாக ஈடுபடுவது என்று முடிவு செய்ததும் எம்.ஜி.ஆரிடம் ஆசி வாங்க சென்னைக்கு வந்தார் என்.டி.ராமாராவ். ராமாவரம் தோட்டத்தில் மகிழ்ச்சியோடு அவரை வரவேற்று கட்டித் தழுவினார் எம்.ஜி.ஆர். 'உங்களுக்கு அரசியலில் வெற்றி வாய்ப்பு இருக்கு என்று நீங்கள் நம்புகிறீர்களா?' என்று கேட்டார் எம்.ஜி.ஆர் 'கண்டிப்பாக நம்புகிறேன். உங்கள் ஆசி வேண்டும்...' என்றார் என்.டி.ஆர்.

'கட்சிக்கு என்ன பெயர் வைக்கப் போறீங்க?'

'தெலுங்கு ராஜ்யம்!'

''வேண்டாமே... 'தெலுங்கு தேசம்' என்று வையுங்கள். நல்லா பொருத்தமாக இருக்கும்' என்றார் எம்.ஜி.ஆர்.

எம்.ஜி.ஆரின் ஆலோசனைக்கு மறுபேச்சு பேசாமல், 'நீங்கள் சொல்கிற மாதிரி நான் ஆரம்பிக்கிற கட்சிக்கு 'தெலுங்கு தேசம்' என்றே பெயர் வைக்கிறேன்; ரொம்ப தாங்க்ஸ்ண்ணா' என்றார். 'தெலுங்கு தேசம்' என்ற கட்சியின் பெயர் ராமாவரம் தோட்டத்தில் தான் உருவானது.

இந்திய தேசிய அரசியலில் எம்.ஜி.ஆரின் நட்பும் அரவணைப்பும் பல தலைவர்களுக்கு கிடைத்தது என்பதும் உண்மை!

# எம்.ஜி.ஆர். கூறிய ஜோதிடம்

விஜயா கார்டனில் ''ராமன் தேடிய சீதை'' படப்பிடிப்பு. ப.நீலகண்டன் படத்தை இயக்கிக் கொண்டிருந்தார்.

அன்றைய படப்பிடிப்பில் எம்.ஜி.ஆரும் ஜெயலலிதாவும் சேர்ந்து நடிக்கும் நாட்டியம் படமாகிக் கொண்டிருந்தது. 'டான்ஸ் மூவ்மெண்'ஸைத் தம் உதவியாளருடன் டான்ஸ் டைரக்டர் கோபாலகிருஷ்ணன் ஆடிக் காண்பித்தார், எம்.ஜி.ஆர், ஜெயலலிதா முன்னால்.

படப்பிடிப்பிற்கு நடுவே பொம்மை நிருபர் திரு சாமிநாதன் எம்.ஜி.ஆர் அவர்களைப் பேட்டி எடுக்க எண்ணினார்.ஒரு மரத்தடியில் எம்.ஜி.ஆர், ஜெயலலிதாவுடன் சாமிநாதனும் அமர்ந்து கொண்டார். எம்.ஜி.ஆர் பேட்டியைப் பிறகு வைத்துக் கொள்வோம் என்று கூறி சில பொது விஷயங்களைப் பற்றி பேசினார்.

''சினிமா உலகில் மட்டுமல்ல, அரசியல் உலகிலும் பல மாறுதல் நடக்கும் பாருங்க... இப்போது சொல்கிறேன்... குறித்துக் கொள்ளுங்க. செல்வி (ஜெயலலிதா) அம்மு இன்று டாப் டான்ஸர், வருங்காலத்தில் அரசியலில் ஈடுபட்டு அதிலும் டாப் ஆக வருவார்!'' என்றார்.

ஜெயலலிதாவுக்குச் களுக்கென்று சிரிப்பு வந்தது. ''சார்! நான் சினிமாவை விட்டால் டான்ஸ் நாட்டிய நாடகம்தான் தொடங்குவேன். நானாவது அரசியலுக்கு வருவதாவது...'' என்றார் எம்.ஜி.ஆரிடம்.

''எனக்குக் கொஞ்சம் ஜோசியத்தில் நம்பிக்கை உண்டு. உன் கைரேகை ஜோதிடப்படி கட்டாயம் அரசியலுக்கு வந்து ஒரு புரட்சி பண்ணப் போறே!'' என்றார் எம்.ஜி.ஆர்.

படப்பிடிப்புக்கு இருவருக்கும் அழைப்பு வரும் வரை, இந்த விவாதம் நடைபெற்றது விஜயா கார்டனில். எம்.ஜி.ஆர் சொன்ன அந்த ஜோதிடம் பலித்தது. தமிழகத்தின் முதல்வராக இன்றும் திகழ்கிறார் (2012) புரட்சித் தலைவி அம்மா அவர்கள்.

எம்.ஜி.ஆர் அவர்களுக்கு ஜோதிடராக விளங்கியவர் வித்வான் வே. லெட்சுமணன். என்னிடத்தில் மிகுந்த அன்பு காட்டியவர். நான் அம்மன் தரிசனம் மாத இதழை 1990ஆம் ஆண்டு ஆரம்பித்தபோது ஜோதிடப் பகுதியை எழுதியவர் இவர்தான். எம்.ஜி.ஆர் அவர்களுடன் நடந்த பல நிகழ்வுகளை என்னுடன் பகிர்ந்து கொண்டிருக்கிறார்.

அமரர் பேரறிஞர் அண்ணா அவர்களின் ''பணத்தோட்டம்'' அமரர் மூதறிஞர் ராஜாஜி அவர்கள் மொழி பெயர்த்து வெளியிட்ட மார்க்க அரேலியரின் 'ஆத்ம சிந்தனை' ரூசோ எழுதிய 'சமுதாய ஒப்பந்தம்' மகாத்மாவின் கருத்துக்களைக் கொண்ட 'காந்திய நவநீதம்', அமரர் நேருஜி அவர்களின் 'உலக சரித்திரம்', விவேகானந்தரின் சொற்பொழிவுத் தொகுதிகளில் சில, காண்டேகரின் (விதவையைப் பற்றிய) சில நாவல்கள்... இவைகளைப் படித்திருப்பதாக ஒரு பேட்டியில் எம்.ஜி.ஆர் சொல்லியிருப்பதாக என்னிடம் தாய் ஆசிரியர் வலம்புரிஜான் ஒருமுறை தெரிவித்தார்.

''ஒரு நல்ல துறவியை - பற்றற்ற - நல்ல - மனிதரைப் பிறருக்கு வாழ்வதே மாந்தர் கடமை என்ற தத்துவத்தின் ஒட்டுமொத்த உருவமாகக் காட்சி அளித்த ஒரு பெரியவரை - நான் கண்டேன். காஞ்சி முனிவரை கண்ட நிகழ்ச்சியை இப்படி விவரிக்கிறார் அவர்.

தன்னுடைய இளமையின் ரகசியம் பற்றி சொல்லும்போது... தேகப்பயிற்சி அன்றாடம் மிக முக்கியம். எதற்கும் ஓர் அளவு வேண்டும். கைக்குத்தல் அரிசி உண்ண வேண்டும். கீரை வகைகள் கண்டிப்பாகத் தினமும் சேர்த்துக் கொள்ள வேண்டும். பத்து நிமிட தியானம். இப்படிச் செய்தால் இளமையின் ரகசியம் புரியும் என்பது புரட்சித் தலைவரின் திடமான நம்பிக்கை. சத்தியத்திற்கு சாட்சியம் சொல்வது போல் அவர் வாழ்வின் ஒவ்வொரு முறையும் அமைந்தது என்பார் வலம்புரிஜான். என்னுடன் திருநெல்வேலிக்கு வந்தபோது அன்றைய சந்திர விலாஸ் ஹோட்டலில் வைத்து சொன்னவை இவை.

இதயக்கனி என்னும் மாத இதழை நடத்தி வருபவர் திரு விஜயன். எம்.ஜி.ஆர் பற்றி நிறைய விஷயங்களை அறிந்து வைத்திருப்பவர். என்னுடைய அன்புக்கு பாத்திரமான நண்பர். அவரிடம் ஒருமுறை தொலைக்காட்சி நிலையத்தில் வைத்து நானும் எனது நண்பர் திரு சுபாஷ்சந்திரனும் பேசிக் கொண்டிருந்தபோது சொன்னவை கீழே தரப்படுகின்றன!

எம்.ஜி.ஆர் அசைவ உணவு சாப்பிடக் கூடியவர்தான். ஆனால் வெள்ளிக்கிழமை மட்டும் அசைவ உணவு உட்கொள்ள மாட்டார்.

எம்.ஜி.ஆர் அவர்கள் சில உறுதியான நல்ல வழக்கங்களைக் கடைப்பிடித்து வந்தார். பல ஆண்டுகளாகத் தொடர்ந்த வழக்கங்கள். காபி, தேநீர் சாப்பிடுவதில்லை. வேறு போதைப் பொருள்களையும் தீண்டியதே இல்லை. இவை தெரிந்த விஷயங்கள்தான்.

எம்.ஜி.ஆர் வெள்ளிக்கிழமையன்று அது எப்படிப்பட்ட விருந்தாயினும் சரி, ஜனாதிபதி, பிரதமர் அளிக்கும் விருந்தானாலும் சரி, அதில் அவர் கலந்து கொண்டால் சைவ உணவை மட்டுமே சாப்பிடுவார்! ஏன் தெரியுமா? பெற்ற தாயைத் தெய்வத்துக்கும் மேலாகப் பக்தியுடன் வணங்குகிறவர் எம்.ஜி.ஆர் என்பதை அனைவருமே அறிவர். அவரது அன்னை சத்யபாமா அம்மையார் மறைவு நாள் வெள்ளிக்கிழமை. அதனால்தான் அன்று உணவில் ஒரு ‘விரதம்’ கொண்டிருந்தார். இதைக் கடைசி வரை கடைப்பிடித்தார்.



# எம்.ஜி.ஆருடனான சந்திப்புக்கள்

எம்.ஜி.ஆர் அவர்களை எனக்கு சபாநாயகராக இருந்த க.ராஜாராம் அவர்கள்தான் அறிமுகப்படுத்தினார். மாண்புமிகு க.ராஜாரராரம் அவர்கள் தினமணியின் ஆசிரியர் திரு ஏ.என்.சிவராமன் அவர்களைப் பார்க்க வருவதுண்டு. என்னைச் சுட்டிக் காட்டி ''இவன் தினமணியில் எழுதிக் கொண்டு இருக்கிறான். என்னுடைய உறவினர்'' என்று ஏ.என்.எஸ் ராஜாராமிடம் சொன்னார்.

ஒரு திரைப்பட விழாவுக்கு நான் போய் இருந்தேன். அங்கே எம்.ஜி.ஆர் அவர்களிடம் என்னை அறிமுகப்படுத்தி தினமணி சிவராமனின் பேரன் முறை இவர் என்றார் ராஜாராம். எம்.ஜி.ஆரை முதன்முதலில் மிக அருகில் இருந்து பார்த்த நிகழ்ச்சி அது. இந்த அறிமுகம் நடந்து சரியாக இரண்டு வாரம் கழித்து எனக்கு ஒரு இன்ப அதிர்ச்சி காத்திருந்தது.

தாய் வார இதழ் அலுவலகத்தில் ஆசிரியர் வலம்புரிஜான் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது உதவி ஆசிரியர் திரு கஸ்தூரி ரங்கன் (தினமணி கஸ்தூரி ரங்கன் அல்ல), பத்மநாபன், நாகைதர்மன் இன்னும் சிலரும் இருந்தார்கள். எம்.ஜி.ஆர் வந்து இறங்கினார். வலம்புரிஜான் அவருக்கு வணக்கம் வைத்தார். என்னை அறிமுகம் செய்து வைத்தார் வலம்புரிஜான்!

''தெரியுமே! ஏ.என்.எஸ் உறவினர் என்று ராஜாராம் அவர்கள் சொன்னார்கள். இதுபோன்ற இளைஞர்களை அருகில் வைத்துக் கொண்டிருப்பதால்தான் உங்களால் இளமையாக சிந்திக்கவும் இருக்கவும் முடிகிறது'' – என்று எம்.ஜி.ஆர் சொல்லி தாய் அலுவலக மாடிப்படியில் வேகமாக ஏறி மேலே சென்ற காட்சியை வைத்தகண் வாங்காது அப்படியே பார்த்துக் கொண்டிருந்தேன்.

என்னுடைய நண்பர் மேலவை உறுப்பினராக இருந்த புலவர் அறிவுடைநம்பி அவர்கள், என்னை கலைமகள்

அலுவலகத்திற்குப் பார்க்க வரும்போதெல்லாம் திரு ஞானசம்பந்தர் என்று அழைத்தபடிதான் வருவார். எங்களுக்குள் வயது வித்தியாசம் அதிகம் இருந்தாலும் அன்புடன் நட்புடன் பழகியவர்.

மகன் கல்யாணத்திற்காக தலைமைதாங்க தேதி கேட்டு எம்.ஜி.ஆரை சந்திக்கச் செல்கிறார் அறிவுடைநம்பி. உடன் நானும் இருந்ததாக எண்ணிப் படிக்கவும் இச்சம்பவத்தை.

எம்.ஜி.ஆர் சாப்பிட்டுவிட்டு வரும்படி சொல்கிறார். கீழே சாப்பாடு முடிந்ததும் மேலே ஏறியதும் ''என்ன சாப்பாடு?'' - எம்.ஜி.ஆர் கேட்கிறார். சாப்பாடு என்னென்ன கொடுக்கப்பட்டது என்பதைத் தலைவரிடம் சொன்னதும் அவர் பால் பாயாசம் இல்லை என்பதை உணர்கிறார்!

உடனடியாக இரண்டு கோப்பைகளில் பாலை வரவழைத்து அதில் பழத்தை நறுக்கிப்போட்டு கொஞ்சம் சாதத்தையும் போட்டு கலக்கி எம்.ஜி.ஆர் கொடுத்தபோது இந்த பூவுலகமே நம் கைக்குள் வந்ததாக உணர்வு ஏற்பட்டது!

புலவர் அறிவுடைநம்பிக்கு கல்யாண தேதி தலைமை தாங்குகிற நாள் கிடைத்தது. மகிழ்ந்து போனார். இதை ஏன் சொல்கிறேன் என்றால் நான் எம்.ஜி.ஆர் அவர்களின் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்றபோதெல்லாம் சாப்பிடாமல் வந்ததே இல்லை. எம்.ஜி.ஆரின் மெய்காப்பாளர் திரு ராமகிருஷ்ணன் அவர்களும் என்னைச் சாப்பிடாமல் அனுப்பியதில்லை!

ராஜஸ்தான் யூத் அசோசியேஷன் சார்பாக ஏழை மாணவர்களுக்கு நோட் புக்ஸ் வழங்கும் விழா. அந்த நிகழ்வை இளையபாரதம் நிகழ்ச்சிக்காக (சென்னை வானொலிக்காக) ஒலிப்பதிவு செய்யும் பொறுப்பு எனக்கு வழங்கப்பட்டிருந்தது. அன்று நான் கண்ட நிகழ்ச்சி என் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி.

ஒரு கையில் அடிபட்டு பெரிதாகக்கட்டுப் போட்டிருந்த மாணவர் எம்.ஜி.ஆர் அவர்களிடமிருந்து நூல் மற்றும் நோட்டு புத்தகங்களை வாங்க மேடை ஏறினார். அந்த மாணவர் ஒரு கையில் அடிபட்டு இருக்கிறார் என்பதை க்ஷண நேரத்தில்

உணர்ந்து கொண்டு தன்னுடைய ஒரு கையை அவனின் ஒரு கையோடு வைத்துக் கொண்டு இன்னொரு கையால் எல்லா புத்தகங்களையும் தானே வாங்கிப் புகைப்படக்காரர்கள் படம் எடுக்கும் வரை பொறுமை காத்தார் எம்.ஜி.ஆர். மற்றவர்களை மதிக்கத் தெரிந்தது மட்டுமல்ல, இளைஞர்களிடம் கனிவு காட்டியவர் எம்.ஜி.ஆர் என்பதைப் புரிந்து கொண்டேன். இன்னொரு நிகழ்ச்சியையும் சொல்கிறேன். எம்.ஜி.ஆரிடம் மந்திரிகளும் கட்சி நிர்வாகிகளும் எவ்வளவு பயபக்தியுடன் இருந்தார்கள் என்பதைப் பார்ப்போம்.

என்னைத் தாம்பிரவருணி தாம்பிரவருணி என்று அன்புடன் அழைப்பவர் செயின்ட் ஜார்ஜ் பள்ளிகளின் தாளாளர் ராஜ்குமார் அவர்கள். இவர் பிஷப்பாகவும் பொறுப்பு வகித்தவர். ராஜ்குமார் அவர்கள் தினத்தூது என்ற நாளிதழையும் நடத்தினார். இந்த நாளிதழில் வெளியாகும் கதை கட்டுரை பகுதிகளை நான் ஆலோசகராக இருந்து கவனித்துக் கொண்டிருந்தவன்.

தினத்தூதுவின் பத்தாவது ஆண்டு விழா. எம்.ஜி.ஆர் உடல்நலக்குறைவுடன் இருந்தாலும் ராஜ்குமார் அவர்கள் மீது கொண்ட அன்பால் தலைமை தாங்க வந்தார். நான் முதல் வரிசையில் அமர்ந்து இருந்தேன். மேடை நிகழ்வுகளை என்னால் உன்னிப்பாகக் கவனிக்க முடிந்தது. பல அமைச்சர்களும் மேடையில் உட்கார்ந்திருந்தார்கள்.

ஒரு அமைச்சரின் பெயரைச் சொல்லிப் பேச வருமாறு ராஜ்குமார் அவர்கள் அழைத்தார்கள். இரண்டு தடவை மூன்று தடவை பெயர் சொல்லியும் இருக்கையை விட்டு எழாத அமைச்சர் எம்.ஜி.ஆர் அவர்களுடைய கண் அசைவு ''போய் பேசுங்கள்'' என்கிற மாதிரி உத்தரவு கிடைத்த பின்புதான் பேச எழுந்திருந்தார். அரங்கமே அதிர்ந்தது. ஆளுமையில் எம்.ஜி.ஆருக்கு நிகர் எம்.ஜி.ஆர் தான்.

எம்.ஜி.ஆர் என்கிற மாமனிதரைப் புரிந்து கொள்ள விசாலமான மனது வேண்டும். இந்திய மக்களுக்கு மட்டுமன்றி உலகம் முழுவதும் வாழும் மக்களுக்கு அவர் புனிதராகவே தெரிகிறார். எம்.ஜி.ஆர் என்கிற மாமனிதரின் புகழ் இன்னும் பல நூறு ஆண்டுகள் நிலைத்துதான் நிற்கும்!

இங்கே என்னுடைய இன்னொரு நண்பரைச் சொல்ல வேண்டும். இவர் என் அம்மா - அப்பாவுடன் மணிக் கணக்காக பேசக் கூடியவர். பெயர் கவிஞர் குடந்தை கீதப்பிரியன். தாய் மூலம் அறிமுகமான என் இனிய சகோதரர் என்றே சொல்லலாம்.

வானொலியில் பல நிகழ்ச்சிகளை வழங்கிக் கொண்டிருப்பவர். வலம்புரிஜான் இவரை நம்பி தாய் பத்திரிகையை ஒப்படைத்தது உண்டு. ஆசிரியர் குழுவில் ஒருவராக இருந்த கவிஞர் கீதப்பிரியன் எம்.ஜி.ஆர் பற்றி பல சம்பவங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டுள்ளார். எம்.ஜி.ஆர் அவர்களிடமிருந்தோ வலம்புரிஜான் அவர்களிடமிருந்தோ நானும் அவரும் எந்த உதவியையும் பெற எண்ணவில்லை! இது ஏன் என்று இன்று வரை எனக்குப் புரியவில்லை!



# பூர்ணத்திற்கு அளித்தப் பேட்டி

பொதுவாக எம்.ஜி.ஆர் அவர்கள் தனிப்பட்ட முறையில் யாருக்கும் பேட்டி அளிப்பதில்லை. எம்.ஜி.ஆர் முதல்வர் ஆவதற்கு முன்பாக 1974ஆம் ஆண்டு நடிகர் பூர்ணம் விஸ்வநாதனுக்கு ஆகஸ்ட் மாதம் பேட்டியை வழங்கினார். மத்திய அரசின் சார்பில் வெளியிடப்படும் தமிழ் மாத இதழ் திட்டம். இந்தத் திட்டம் மாத இதழுக்காக வழங்கிய பேட்டி இது. இந்தப் பேட்டியை படித்தாலே எம்.ஜி.ஆர் அவர்களின் பரந்த ஞானத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

1980ஆம் ஆண்டு நான் சென்னைக்கு வந்த நேரம். என்னுடைய சகோதரர் எஸ். சங்கரநாராயணன் திரு முத்துசாமி என்பவருடன் இணைந்து நாடக கொட்டகைகளில் நாடகம் நடப்பதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்பாகச் சென்று நாடகம் பார்க்க வருபவர்களை (ரசிகர்களை) ஒழுங்குபடுத்துவார். திரு முத்துசாமி அவர்களுடைய தலைமையின் கீழ் பல படித்த இளைஞர்கள் பொழுது போக்காக இதைச் செய்து கொண்டு வந்தார்கள். சிம்சனில் வேலை செய்து கொண்டே இந்தப் பணியை மாலை நேரம் பொழுதுபோக்காகச் செய்து கொண்டிருந்தார் திரு முத்துசாமி. பிரண்ட்ஸ் யூனிட் என்று இதற்குப் பெயர் வைத்துக் கொண்டார்கள்.

நானும் இந்த யூனிட்டில் சர்வீஸ் செய்வதற்காக என் தம்பியின் மூலம் இணைந்து கொண்டேன். பல நாடக நடிகர்கள், திரைப்பட நடிகர்களுடன் எனக்கு அப்போது பழக்கம் ஏற்பட்டது. அதே காலகட்டத்தில் தினமணி நாளிதழுக்காக நாடக விமர்சனம் செய்யும் பொறுப்பும் கிடைத்தது.

குணச்சித்திர நடிகர் பூர்ணம் விஸ்வநாதன் மீது எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. காரணம் இந்தியா சுதந்திரம் அடைந்தபோது அதை டெல்லி வானொலியில் தமிழில் முதல்முதலாக அறிவிக்கும் பாக்கியத்தைப் பெற்றவர் திரு பூர்ணம் விஸ்வநாதன் தான்.

பூர்ணம் விஸ்வநாதன் அவர்களுடைய நாடகத்தைப் பார்த்த சாரதி சபாவில் பார்த்துவிட்டு அரங்கில் பேசிக் கொண்டிருந்தேன். திருவல்லிக்கேணி வெங்கட்ரங்கம் பிள்ளைத் தெருவில் பார்த்தசாரதி சபா நாடக கொட்டகை அந்தக் காலங்களில் இருந்தது. திரு சேஷாத்திரி என்பவர் அப்போது பார்த்த சாரதி சபாவின் செயலாளராக இருந்ததாக ஞாபகம்.

நாடக உலகைத் தாண்டி எங்களது விவாதம் தொடர்ந்த போது திட்டம் மாத இதழுக்காக புரட்சித் தலைவரைப் பேட்டி எடுத்த விஷயத்தைச் சொன்னார் பூர்ணம். கலாச்சாரம், ரசிகர்களின் தன்மை, அரசு கலைத்துறையில் தலையிடாத தன்மை, ஸ்டார் நடிகர்களின் தேவை, தேசீய விருது, சென்சார் முறை இப்படி பல விஷயங்களை எம்.ஜி.ஆர் அவர்களிடம் கேள்வியாகக் கேட்டதை என்னிடம் பூர்ணம் தெரிவித்தார்கள்.

மிகுந்த ஈடுபாட்டுடன் பழைய நாடக சம்பவங்களைக் கேட்கிறீர்கள், என்னுடைய வானொலி நாட்களைப் பற்றி அடிக்கடி என்னுடன் விவாதிக்கிறீர்கள், தற்கால நாடகங்கள் பற்றியும் உங்களுக்கு அபிப்ராயம் இருக்கிறது. நான் தங்களுக்கு நாளை வாணிமகாலில் வைத்து ஒரு பரிசு தருகிறேன்'' - என்றார் என்னைப் பார்த்து பூர்ணம் விஸ்வநாதன்.

சொல்லிய மாதிரி திட்டம் 1974 இதழை என்னிடம் பரிசாக தந்து இதில் அவர் எடுத்த பேட்டி வெளியாகியிருப்பதாகச் சொன்னார். அந்த பேட்டி வெளியான இதழை நான் பலமுறை படித்திருப்பேன்.

**கேள்வி: சமூகத்தில் மாறுதல்களைக் கொண்டு வருவதில் கலைஞர்களுக்குப் பெரிய பொறுப்பு இருக்கிறது என்பதை நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள். தமிழில் எடுக்கப்படும் திரைப்படங்கள் மூலம் இந்த லட்சியம் கை கூடுகிறதா?**

**எம்.ஜி.ஆர்:** சமூகத்தில் என்னைப் போன்ற கலைஞர்களின் வளர்ச்சியே சிறந்த உதாரணமாகும், லட்சியம் கை கூடுகிறது என்பதற்கு. கலைஞன் தனது பாத்திரத்தின் மூலம் வெளியிடும் கருத்துக்களை மக்கள் போற்றுகிறார்கள்.

என்னைப் பொறுத்தவரையில் நான் நடிக்கும் பாத்திரங்கள் நேர்மை நெறியை அடிப்படையாகக் கொண்டவை. நல்லதே நினைத்து, நல்லதே பேசி, நன்மையே செய்யும் பாத்திரங்களில் வந்து நான் வெளியிடும் கருத்துக்களுக்கு நல்ல வரவேற்பு இருப்பதால்தான் நான் இன்று கொள்கை உள்ள கலைஞன் என்ற முறையில் இவ்வளவு தூரம் மக்கள் மனதில் இடம் பிடிக்க முடிந்திருக்கிறது.

**கேள்வி: சமூகத்தை உயர்த்தும் நோக்கம் இல்லாத கதைகளைக் கொண்ட படங்களில் கலைஞர்கள் நடிக்க மறுப்பதுதான் நியாயமாயிருக்கும் அல்லவா?**

**எம்.ஜி.ஆர்:** ஆமாம். ஆனால், முதலில் கலைஞனுக்கு மற்ற தொழிலாளர்களைப் போல வாழ்க்கை உத்திரவாதம் இருந்தாக வேண்டும்.

கலைஞன் வாழ்வதற்கு முதலில் வகை செய்ய வேண்டும். பிறகுதான் லட்சியம் வரமுடியும். நாட்டுக்கு நன்மை என்ற பொறுப்பு கலைஞனுக்கு மட்டும்தான் என்பதை என்னால் ஏற்க முடியவில்லை.

லட்சியத்துக்காகப் போராடிக் கொண்டு கலைஞன் மட்டும் வறுமையில் உழல்வானேன்? அவனுடைய அனுபவத்துக்கேற்றவாறு அவனுக்கும் ஊதிய உயர்வு போன்ற வசதிகள் அளிக்கப்பட வேண்டும். ஓய்வு கால வசதிகள் பெற அவனுக்கும் உரிமை உண்டு. இதற்கெல்லாம் உத்திரவாதம் அளித்த பிறகுதான் அவன் முழுச் சுதந்திரத்துடன் தன் கலைப் பொறுப்பை நிறைவேற்ற வாய்ப்புக் கிடைக்கும்.

சமூக லட்சியம் ஒன்றிற்கு அவன் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளலாம். இப்போது உறுதியற்ற சூழ்நிலையில், சினிமாவில் ஏதாவது வேலை கிடைத்தால், கற்பக விருட்சமாகக் கலைஞன் அதைக் கருதுகிறான்.

**கேள்வி: எழுத்தாளர்களும் கலைஞர்களும் தாமே அவர்கள் மற்ற சாமானியத் தொழிலாளர் போல் வாழ்க்கை வசதிகளிலேயே கண்ணாயிருக்கக் கூடாது என்று ஒரு அழுத்தமான கருத்தை ஒரு சாரார் சமீபத்தில் ஒரு எழுத்தாளர் கூட்டத்தில் வற்புறுத்தினார்கள். இது நடிப்புக் கலைஞர்களுக்கும் பொருந்தாதா?**

**எம்.ஜி.ஆர்:** உறுதியாக ஊன்றி நிற்க முடிந்த பிறகுதான் கலைஞன் லட்சியங்கள் பற்றிப் பேசமுடியும் என்றும் மீண்டும் வற்புறுத்துகிறேன்.

நான் முதன்முதலாகக் கதாநாயகனாக நடித்து வெளிவந்த ராஜகுமாரி என்ற படத்தில், கதாநாயகன் மந்திர தந்திரங்கள் எதையும் சாதிக்கக் கூடியவன். இவ்வாறு, சமூக நன்மைக்கு எதிரான கருத்தை மக்கள் மனதில் பதியவைக்கும் பாத்திரம் அது. பெரிய சமூக லட்சியத்துடன் அன்று அதை ஏற்பதற்கு நான் மறுத்திருந்தால், கதாநாயகனாக மக்களுக்கு அன்று அறிமுகமாகியிருக்கமாட்டேன். இன்று நான் அப்படிப்பட்ட கதைகளில் நடிப்பதில்லை.

எந்தக் கலைஞனும் முதலில் அறிமுகமாக வேண்டும். மக்களால் கலைஞன் என்று ஒப்புக் கொள்ளப்படாமல் ஒருவன், சமூக, தேசீயக் கொள்கைகளைப் பற்றிப் பேசி பயனில்லை, மக்கள் மனதில் பதியாது.

**கேள்வி: இந்நாட்டுக்கெனவும் தமிழ்நாட்டுக்கெனவும் தனிச் சிறப்பாக உள்ள கலாச்சார அம்சங்களை அழுத்திச் சொல்லும் கருவியாகவே திரைப்படம் விளங்க வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறதே! தாங்கள் அதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

**எம்.ஜி.ஆர்:** இதில் எனக்கு மாறுபட்ட கருத்து கிடையாது. ஆனால் நம் நாட்டுக் கலாச்சாரம் என்ன என்பது பற்றி சரியான விளக்கம் இன்னும் யாராலும் தரப்படவில்லை. நமது கலாச்சாரப் பண்புகள், சமூகத் தேவைகளுக்கேற்ப மாறி வருவதையே இது காட்டுகிறது. எனவே சமுதாய, கலாச்சார முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்கள் நமது கலாச்சாரப் பண்புகள் யாவை என்பதைத் தெளிவாக வரையறை செய்து கொள்வது முற்றிலும் அவசியமாகும். நமது பண்பாடு கெட்டுவிடக் கூடாது என்பதில் எல்லோரும் உறுதியாக இருக்க வேண்டும்.

**கேள்வி: கொஞ்ச காலமாகவே பெரும்பாலான தமிழ்ப் படங்கள் நஷ்டத்தில் முடிந்துவிட்டனவே! இதற்கு என்ன காரணம்?**

**எம்.ஜி.ஆர்:** சில நம்பிக்கைகள், யோசனைகள், விதிமுறைகள் முதலியவற்றை சமுதாய மாற்றத்துக்காகவும், மக்களின் கஷ்டங்களைப் போக்கும் வழியிலும், மக்களுக்குச் சொல்லியாக வேண்டும்.

மக்களுக்குப் புரியாதவற்றைச் சொல்வதாலும், மக்களுக்குத் திகைப்பூட்டி இவர்கள் போடும் புதிரைப் புரிந்து கொள்ள முடியாதபடி மக்களைத் தவிக்கவிட்டு அதுவே தம் திறமையினை வெளிக்காட்ட விரும்புவதாலும், சிலர் பல தோல்விகளைச் சந்திக்க நேருகிறது.

மக்களைவிடத் தங்களைப் புத்திசாலிகள் என்றோ, மக்களிடமிருந்து தாம் வேறுபட்ட தனித்தன்மை பெற்றவர்களென்றோ காட்டிக் கொள்வதாலும் தோல்வியைச் சந்திக்கிறவர்கள் உண்டு.

எத்தனை படங்களில் நான் வேலை செய்கிறேன் என்பதாக படத்தின் எண்ணிக்கையில் கவனம் செலுத்துவதாலும் தோல்விகள் ஏற்படுவதுண்டு. எந்த ஒரு கட்டத்திலும் மக்கள் எதை எதிர்பார்க்கிறார்களோ அதைத் தராவிட்டால் படங்கள் தோல்வியே அடையும்.

ரசிகர்களின் விருப்பத்தைச் சரியாக அறிந்து படங்களை எடுத்தால்தான் அவை வெற்றியடையும். தமிழ்நாட்டில் படம் பார்ப்போர் எண்ணிக்கை அதிகம், ஆனால் படங்கள் தோல்வி அடைகின்றன. இதன் பொருளைப் புரிந்து, இதற்கு வழிமுறை காணவேண்டும்.

**கேள்வி: தமிழ்த் திரைப்பட உலகில் ''ஸ்டார் சிஸ்டம்'' இன்னமும் மிக முக்கிய அம்சமாக நீடிக்கிறதே! பம்பாயைப் போலச் சென்னையிலும் புதுமுகங்களைக் கொண்டு வருவது பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

**எம்.ஜி.ஆர்:** மக்களால் நன்கு ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டால், அந்தக் கலைஞன் ஸ்டார்தான். அவன் ஏன் போக வேண்டும்? பம்பாயில் புதுமுகம் அறிமுகப்படுத்தப்பட்ட பட்டியலைப் பார்ப்போம். பாராட்டும் வரவேற்பும் பெற்ற புதுமுகங்களுக்கு இப்போதுள்ள படங்களின் எண்ணிக்கை எவ்வளவு?

ஒரு ஆசிரியர் எத்தனை புத்தகங்கள் எழுதுகிறாரோ, அதற்கேற்ப அவரைத் தொடர்ந்து எழுதும்படி வற்புறுத்துகிறார்கள். ஒரு நடிகன் மட்டும் சினிமாவில் ஒரு முறை நடித்துவிட்டு, மக்கள் அவனை வரவேற்றாலும் படத் தயாரிப்பாளர்கள் நம்பிக்கையோடு அவனை ஒப்பப்தம் செய்தாலும் நட்சத்திர மேலாதிக்கம் எனச் சொல்வதும், அந்த நடிகனின் அனுபவம் கலைத்துறைக்குப் பயன்படாமல் செய்வதும் ஏன்?

இசைக் கலைஞர் ஒருவரின் முதல் கச்சேரி முடிந்ததும், இன்னொரு புதுமுகத்தை ஏற்று அவரை வீட்டுக்கு அனுப்ப முடியாது. பொருத்தமில்லாதவர்களை, மக்களின் வெறுப்புக்கு ஆளானவர்களை, ஒருபோதும் மக்கள் மேல் திணிக்க முடியாது. எனவே, புதுமுகம் என்று சொல்வதைவிட, புதிய புதிய உத்திகளைக் கையாளும் கலையுணர்வு பெற்ற தகுதி பெற்றவர்களை வாழவைப்பதற்குக் கலை உலகம் முன் வரவேண்டும்.

கலையுலக ஏகபோக முதலாளித்துவம் அதற்குத் தயாராயில்லை என்றால், அந்தப் பொறுப்பினை அரசு மேற்கொள்ள வேண்டும். எப்படி என்பதனைப் பற்றி மேலும் நிறைய விவாதிக்க வேண்டும், மேலும் மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

**கேள்வி: திரைப்படத் தொழிலில் அரசாங்கத்தின் தலையீடு எவ்வளவு இருக்க வேண்டும் எனத் தாங்கள் விரும்புகிறீர்கள்? திரைப்படத் தொழில் அரசுடைமையாவதைத் தாங்கள் வரவேற்பீர்களா?**

**எம்.ஜி.ஆர்**: தலையீடு என்பது வேறு, துணை நிற்பது என்பது வேறு. எந்த அரசும் கலை உணர்வில் தலையிடாமல் துணை நிற்பதுதான் சாலப் பொருத்தமுடையதாகும். சமூகம், கலாச்சாரம், மதம், அரசியல் ஆகியவை சம்பந்தமாக நேர் மாறான கருத்துக்கள் கொண்டவர்கள் ஒவ்வொருரிடமும் மெய்யான கலையுணர்வு இருக்கலாம். குறிப்பிட்ட எந்தக் கலையுணர்வை சமூகத்துக்காகப் பயன்படுத்துவது, துணை நிற்பது என்பதில் ஒரு முடிவுக்கு வருவது அவ்வளவு எளிதல்ல.

இந்தியத் துணைக் கண்டம் முழுமைக்கும் மொழிவழி பண்புவழி கலாச்சார வழிகளில் ஒட்டுமொத்தமாக துணைக்கண்டம் முழுமைக்குமாக, கலைத் தொழிலைப் பற்றிய சரியான, பொருத்தமான, முன்னேற்றத்துக்குத் தேவையான, பொதுவான பண்புகளுக்கேற்ற ஒரு முடிவை ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகு எடுத்தாக வேண்டும். அப்படி ஒரு கொள்கை அமைத்து அதை நடைமுறைப் படுத்தும் நல்லோர்கள் கொண்ட ஆட்சி இருக்குமானால், அந்த ஆட்சியில் இந்தக் கலைத் தொழிலை அரசுடைமையாக்குவது நாட்டுக்கு நன்மை பயக்கக் கூடியதாக இருக்கும்.

மாநிலத்துக்கு மாநிலம் ஒரு நினைப்பு. தேர்தலின் முடிவுக்கேற்ப ஒரு வழிமுறை, தங்கள் தகுதி பலவீனத்தைப் பாதுகாக்க ஒரு ஏற்பாடு என்ற நிலையில் இன்று இந்தியத் துணைக் கண்டம் இருக்கிறது. இதற்கு முற்றிலும் மாறான நிலையில்தான் சினிமாத் தொழிலை அரசுடைமையாக்க முடியும்.

**கேள்வி: இன்றைய சென்ஸார் முறை பற்றித் தங்கள் கருத்து என்ன?**

**எம்.ஜி.ஆர்:** இப்போதைய நிலைமை என்னவெனில், தணிக்கை முறை இடத்துக்கு இடம், படத்துக்குப் படம் மாறுபடுகிறது. தணிக்கை சம்பந்தமான விதிமுறைகள், எப்படியும் விளக்கம் தரக்கூடிய வகையில், திட்டவட்டமான முறையில் இல்லாமலிருப்பதே இதற்குக் காரணம். படம் பார்க்கும் தணிக்கையாளர்களின் மனம் எந்த நிலையில் இருக்கிறதோ அதற்குத் தக்கபடி ஒரு காட்சி அனுமதிக்கப்படும் அல்லது வெட்டப்படும்.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில், பல ஆண்டுகளாக பல படத் தயாரிப்பாளர்களுக்கு இது அனுபவமாயிருந்து வருகிறது. மலையாள மொழியில் அனுமதிக்கப்பட்ட காட்சியைத் தமிழில் வெட்டி விடுவார்கள். காரணம், மலையாளம் தணிக்கையாளர்கள் வேறு, தமிழ்த் தணிக்கையாளர்கள் வேறு. ஆகவே ஒரு சிலருடைய அவ்வப்போதைய விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில்

படம் எடுக்க வேண்டியிருக்கிறது. விதிமுறைகள் சரியானவையாக, நிச்சயமானவையாக, மக்களின் நலனில் அக்கறை காட்டுபவையாக இருக்க வேண்டும்.

எதையாவது யாரையாவது குறை சொல்வதிலேயே பெருமை கொள்ள விரும்புகிறவர்களை தணிக்கைக் குழுவுக்கு நியமனம் செய்யக் கூடாது. சிறந்த இயக்குநர்கள், நடிகர்கள், எழுத்தாளர்கள், தயாரிப்பாளர்கள் போன்றவர்களுக்குத் தணிக்கைக் குழுவில் இடம் கொடுத்தாக வேண்டும். கட்சி அரசியல் உணர்வு கொண்டவர்களுக்கு அங்கு இடம் இருக்கவே கூடாது.

**கேள்வி: தேசீய, பிராந்திய விருதுகளுக்கெனத் திரைப்படங்களையும் கலைஞர்களையும் தேர்ந்தெடுக்கும் முறை குறித்துப் பல குறைகள் சொல்லப்படுகின்றனவே! நீங்கள் பல விருதுகளை வாங்கித் தமிழகத்துக்கே சிறப்புத் தேடித் தந்த கலைஞர் என்ற முறையில் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

**எம்.ஜி.ஆர்:** மாநில மொழிப் படங்களைத் தெரிந்தெடுப்பதிலேயே மிகப் பெரிய சிக்கல்கள் உள்ளன. வடிகட்டும் முறையில், தொழிலிலே இருப்பவர்களுடைய ஒரு சில பிரதிநிதிகளின் தலையீடும் ஆதிக்கமும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதனால் தான் மக்களுடைய ஆதரவைப் பெற்ற படங்கள், படித்த தகுதிமிக்கவரால் பாராட்டப்பட்ட படங்கள் முதலியன ஒதுக்கப்பட்டு ஓடுகின்றன என்று குற்றச்சாட்டுகள் வெளிவருகின்றன.

முதலில், தகுதி வாய்ந்த எழுத்தாளர்கள், கலைஞர்கள், இயக்குநர்கள், தயாரிப்பாளர்கள் ஆகியோர் மட்டுமே மாநிலக் குழுவில் இருக்க வேண்டும். ஒரு ஆண்டில் வெளியிடப்பட்ட மாநில மொழிப் படங்கள் அனைத்தையும் தேர்வுக் குழுவினர் பார்க்க வேண்டும்.

மாநிலத் தேர்வாளர்கள் ஒன்றுகூடி அனைத்திந்தியப் படங்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட படங்கள் அனைத்தையும் மத்திய தேர்வுக்குழுவினர் பார்க்க வேண்டும். அதற்குப் பிறகு

முடிவாகும் தீர்ப்பு சரியான தீர்ப்பு என ஒப்புக் கொள்ளும் மனப்பக்குவத்தை பெற்றாக வேண்டும். எவ்வளவுதான் சிறப்பாக அமைப்புகளை நிறுவினாலும், தொடக்கக் காலங்களில் சிறிய குறைகள் ஏற்படத்தான் செய்யும். அதை மிகைப்படுத்தி நல்ல நோக்கத்தைப் பாழடித்து விடுவது சரியல்ல.

இந்தப் பேட்டி அந்த காலகட்டங்களில் பரபரப்பாகப் பேசப்பட்டது. மத்திய அரசாங்க இதழில் வெளியான பேட்டி என்பதால் பலர் படிக்க வாய்ப்பு இருந்திருக்காது. எனக்கு பரிசாகக் கிடைத்த இந்தப் பேட்டியை நீங்கள் படிப்பதற்காக இந்த நூலில் இணைத்துள்ளேன். மக்கள் மனதில் என்றும் எம்.ஜி.ஆர் வாழ்வார்!



